# கல்கி

குடும்பத்துடன் படிக்க....

KALKI
8.4.2007 ரூ.8.00
80 பக்கங்கள்



# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

15.4.2007 இதழ்...

+16

# அட... மழை! பரிசு மழை...!

## லட்ச ரூபாய் பரிசு ஸ்பெஷல்

எல்லா வயதினரும் கலந்துகொள்ள
ஏராளமான போட்டிகள்...

கலந்துக்கோங்க... கலக்குங்க...
ஆல் தி பெஸ்ட்!





கல்கி

தரம் நிரந்தரம்

இந்துவாகவோ, இஸ்லாமியராகவோ அறிமுகப்படுத்தாமல் ஓர் இந்தியரை (நைனா முகம்மது) வெளிச்சம் போட்டுக் காட்டிய கல்கியின் மதநல்லிணக்கத்துக்குத் தலை வணங்குகிறோம்.

**கடலூர்,** **மூர்த்தி**

அசோகமித்திரனின் 'வாழைப் பழம்' மானுடத்தின் அவஸ்தையை நெஞ்சில் அறைந்தது!

**நெய்வேலி,** **சு.ஸ்ரீகாந்த்**

கருணாநிதி - ராமதாஸ் விசிறி கார்ட்டூன் கண்டு களிப்புற்று உமது கார்ட்டூனிஸ்டின் விசிறியாகிவிட்டேன்.

**கோயமுத்தூர்,**
**என்.கௌரி**

ரமேஷின் தவிப்பை உணர்ந்து தவியாய் தவித்தோம். அவர் வாழ்வில் சாதிக்கப் போவது உறுதி.

**நெய்வேலி,** **மாலதி சங்கர்**

'பருத்தி வீரன்' ப்ரியாமணியின் மணியான கருத்துகள் எங்கள் நெஞ்சத்தில் அவரை உயரத்தில் ஏற்றி உட்கார வைத்துவிட்டன.

**கும்பகோணம்,** **எஸ்.கே.மூர்த்தி**

'மொழி' படம் பற்றிய கேள்விக்கு தராசு முன்மொழிந்த அருமையான பதிலை வாசகர்கள் அனைவரும் வழிமொழிவார்கள்.

**அயன்புரம்,**
**த. சத்தியநாராயணன்**

கவிப்பேரரசு வைரமுத்துவை எங்களின் புனிதமான நட்புக்கும் மரியாதைக்கும் பொருத்தமற்ற வார்த்தைகளில் நான் விமர்சித்ததாக 'கல்கி' வெளியிட்டிருப்பது தவறு. "வாழ்வில் ஜெயித்து முன்னேறிக் கொண்டிருக்கும் வேளையில் குடித்து உடல்நலத்தைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள். நம் முன்னோடிக் கவிஞர்களிடமிருந்து பாடம் கற்க வேண்டியது நம் கடமை" என நான்கூட ஒரு சில கவிஞர்களுக்கு அன்புரை கூறியிருக்கிறேன். "அதே தாய்மைக் கனிவில் கவிஞர் வைரமுத்துவும் கூறியிருக்கக்கூடும்" - இதுவே கல்கி தொலைபேசி அழைப்புக்கு எனது பதிலானது. ஆண் படைப்பாளிகள் வெளிப்புற ஊக்கச் சமாசாரங்களை நாடுகிறார்கள். பெண் படைப்பாளிகள் அந்நிலையில் இல்லை என்பதையும் கூறினேன்.

**சென்னை,** **ஆண்டாள் பிரியதர்ஷினி**

பழைமையை மறந்துவிட்ட இக்காலத்தில் ஓவியர் சந்திரசேகரின் திறமை பிரமிக்க வைக்கிறது. கல்கி தந்த கௌரவம் மிகச் சரியானதே!

**சென்னை - 109,**
**எஸ்.ஆர். ஹரிஹரன்**



# நெஞ்சமெல்லாம்

## வட்டமேஜை

✉ 'வைரமுத்து சொன்னது சரியா' என்ற தலைப்பிலான கருத்துத் தொகுப்புகள் பார்த்தேன். எந்தவித அடித்தளமும் இல்லாமல் எழுப்பப்பட்ட விவாதம் அது. ஈரோட்டில் 'செட்டிநாடு 2007' என்ற தலைப்பில் நிகழ்ந்த அரிமா மாநாட்டில் கவிஞர் வைரமுத்து பேசினார். கவியரசு கண்ணதாசனின் மேன்மைகளைப் பற்றிச் சொல்கிறபோது, 'கவியரசு கண்ணதாசனே தனது மதுப்பழக்கம் பற்றி வெளிப் படையாகச் சொல்லியுள்ளார். ஆனால் அவர் போதையில் எழுதியதே இல்லை" என்று குறிப்பிட்டு, மதுப் பழக்கமுள்ள மற்ற படைப்பாளர்கள் இதனை மனத்தில் கொள்ள வேண்டும் என்று சொன்னார். ''படைப்பாளர்கள் மட்டுமின்றி பொதுவாகவே மனிதர்களுக்கு மதுப் பழக்கம் கூடாது. போதையில் இருப்பவனுக்குத் தன்னுடைய மனைவியைத் தொடக்கூட உரிமையில்லை' என்றுதான் கவிஞர் பேசினாரே தவிர, இன்றைய பாடலாசிரியர்களைப் புண்படுத்தும் விதமாக அவர் பேசவில்லை. இதனை விழா அரங்கில் இருந்தவன் என்கிற முறையில் எழுதுகிறேன்.

– மரபின்மைந்தன் ம.முத்தையா,
பொதுச் செயலாளர்,
வெற்றித் தமிழர் பேரவை.

கோவை,

**க**விஞர் வைரமுத்து பேசியது என்ன என்பது மரபின் மைந்தன் முத்தையாவின் கடிதம் மூலம் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. 25.4.2007 கல்கி அட்டைப் படக் கட்டுரையை வெளியிடும் முன் வைரமுத்து தரப்பில் இதே விளக்கம் நமக்கு அளிக்கப்பட்டிருந்தால் கவிஞரின் மனத்தாங்கலுக்கும் மறுப்புக்கும் இடமின்றிப் போயிருக்கும்.

– ஆசிரியர்

✉ வங்கி இணைப்பு புத்தகத்தின் 'செய்தி வங்கி'ப் பகுதியில் ஒரு வங்கியை நடத்த 1908-ல் ஒரு மாதத்துக்கான தேவை 1950 ரூபாய் என்றும், அதற்கான ஸ்டேட்மென்டையும் பிரசுரித்திருக்கிறீர்கள். ஆனால், 'அரை வருடக் கணக்கு' என்று தலைப்பில் குறிப்பிடப்பட்டிருக்கிறதே...

சென்னை – 91,
வாசுதேவன்

நீ!





**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்**
**எம். மோகன், ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



* மகாதேவன்

பதவி கொடுப்பதும், பறிப்பதும் அ.தி.மு.க.வில் அன்றாட நடைமுறையாகி விட்டன. கட்சியின் தினசரியில் இது குறித்து தினமும் பல அறிவிப்புகள். "ஒரு கோடி உறுப்பினர்கள் உள்ள மாபெரும் கட்சியில், தினசரி அங்கொன்றும் இங் கொன்றுமாக மாற்றங்கள் செய்து கொண்டே இருப்பது தவிர்க்க முடியா தது. அவசியம் நேர்ந்தால் ஓ.பன்னீர் செல்வத்தையேகூட கழற்றிவிடலாம். ஆனால், மற்ற கட்சிகளைப் போல எங்கள் கட்சியில் எந்த முணுமுணுப்பும் இருக் காது. வாய்ப்பு வரும் என்று நம்பிக்கை யோடு காத்திருக்கலாம்" என்கிறார்கள் அ.தி.மு.க. பிரமுகர்கள்.

உட்கட்சி ஜனநாயகம், கட்சித் தேர்தல், கூட்டு ஆலோசனை என்ற அடிப்படை ஜனநாயக அம்சங்கள் சிறிதும் இல்லாவிடினும் 'எல்லாம் அம்மா'தான் என்பதில் சந்தோஷப்படுகிறார்கள் கட்சிக்காரர்கள். அப்படிப்பட்டவர்களுக் குக்கூட ஜெயலலிதா அதிர்ச்சி கொடுத் திருக்கிறார் - டி.வி.மகாதேவனைக் கட்சிப் பொறுப்பிலிருந்து நீக்கியதன் மூலம். மாநில ஜெயலலிதா பேரவைச் செயலாளர் பொறுப்பிலிருந்த அவர் மாற்றப்பட்டு, அந்தப் பொறுப்புக்கு முன்னாள் அமைச் சர் தளவாய் சுந்தரம் நியமிக்கப்பட்டிருக் கிறார். இவர் ஒரு கட்டத்தில் அடிப்படை உறுப்பினர் பொறுப்பிலிருந்தே நீக்கப் பட்டவர் என்பது குறிப்பிடத்தக்கது!

முன்னாள் அமைச்சர் நயினார் நாகேந்திரன் ஜெ. பேரவைச் செயலாளராக இருந்தார். அவரை மாற்றிவிட்டு டி.வி.மகா தேவனைப் போட்டார்கள். சசிகலாவின் சகோதரர் டாக்டர் விநோதகனின் மகன் தான் இந்த மகாதேவன். இவரைக் கட்சிப் பொறுப்புக்கு நியமித்தவுடன், நமது எம்.ஜி.ஆர். பத்திரிகையில், 'தமிழ்நாடு முழு வதும் அவர் பயணம் செய்து ஆலோ சனைக் கூட்டங்களை நடத்துவார்' என் றும் 'அவருக்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும்' என்றும் அறிக்கைவிட்டார் ஜெ. முதல் ஆலோசனைக் கூட்டம் மதுரையில் நடைபெற்றது. ஜெய லலிதாவுக்குத் தருவதைப் போல வரவேற்பைக் கொடுத்தனர். மாவட்டம், மாவட்டமாகச் சென்றார் மகாதேவன். சசிகலா குடும்பத்தி லிருந்து ஏற்கெனவே கட்சியில் முக்கியப் பொறுப்பில் இருக்கும் தினகரனைப் பிடிக் காத பலர், மகாதேவ

**மகாதேவன் சேர்க்கை- நீக்கம் ஆகியவற்றில் சசிகலா குடும்பத்தின் பங்களிப்பு நிறைய என்பதைக் கட்சிக்காரர்களும் ஒப்புக் கொள்கின்றனர்**

* படம் : ஸ்ரீஹரி

னோடு ஐக்கியமானார்கள். அவருக்கென்று ஒரு கோஷ்டி உருவானது. மகாதேவன் கோஷ்டியும் தினகரன் கோஷ்டியும் ஆங்காங்கே மோதிக் கொண்டன. சில இடங்களில் வெட்டு, குத்து அளவுக்குப் போய்விட்டது நிலைமை. இச்சூழலில், ஜெ.வின் தோழி சசிகலா தலையிட்டு மகாதேவனை ஓரங்கட்டினார் என்று சொல்லப்படுகிறது. ஆலோசனைக் கூட்டங்களெல்லாம் ரத்து செய்யப்பட்டன. மகாதேவனுக்குப் பொதுக்குழுவுக்குக்கூட அழைப்பு அனுப்பப்படவில்லை. இறுதியில் நீக்கப்பட்டுவிட்டார்.

மகாதேவன் சேர்க்கை - நீக்கம் ஆகியவற்றில் சசிகலா குடும்பத்தின் பங்களிப்பு நிறைய என்பதைக் கட்சிக்காரர்களும் ஒப்புக்கொள்கின்றனர். சசிகலாவின் சகோதரியான வனஜாவின் மகன்தான் தினகரன். கட்சியின் பொருளாளர். இவரது மனைவி அனு. இவர் சசிகலாவின் மற்றொரு சகோதரரான சுந்தரவதனத்தின் மகள். இப்போது ஜெயா தொலைக்காட்சியின் தலைமை நிர்வாகி. நடராஜனின் சகோதரர் ராமச்சந்திரனுக்குக்கூட சசிகலாவின் ஆதரவு உண்டு. ஆனால், நடராஜன் மட்டும் 'ஒதுக்கப்பட்டிருப்பதாக' ஒரு தோற்றம் உருவாக்கப்பட்டிருக்கிறது. கட்சியின் தலைவியைத் தொண்டர்களும், பிரமுகர்களும் அடிக்கடி நேரடியாகச் சந்திக்க முடியாத நிலையில் சசிகலா குடும்பத்தின் தயவு பல பிரமுகர்களுக்குத் தேவைப்படுகிறது.

மகாதேவன் கவிழ்க்கப்பட்டது 'அரண்மனை விவகாரம்' என்று வர்ணிக்கும் கட்சிப் பிரமுகர்கள், இந்த இடைக்காலத்தில் மகாதேவனோடு நெருக்கம் காட்டிய கட்சிக்காரர்கள் தினகரனால் பழிவாங்கப்படும் ஆபத்து இருப்பதாகவும் சொல்கிறார்கள்.

ஜெ. பேரவைச் செயலாளர் மாற்றம் தவிர, மாநில மாணவர் அணியின் செயலாளராக இருந்த சக்திவேல் முருகனும் மாற்றப்பட்டு, மதுரையைச் சேர்ந்த உதயகுமார் என்பவரை நியமித்திருக்கிறார்கள். முதல் நாள் காவிரிப் பிரச்னைக்காக விருதுநகரில் உண்ணாவிரதம் இருந்த சக்திவேல் முருகன், மறுநாள் காலை சென்னை வந்து சேர்வதற்குள் அவரை மாற்றிவிட்டார்கள்!

அதேபோல் மாநில எம்.ஜி.ஆர். இளைஞரணிச் செயலாளராக இருந்த பெரம்பலூர் ராஜரத்னம் நீக்கப்பட்டு, அவருக்குப் பதில் கடலூர் எம்.சி. சம்பத் நியமிக்கப்பட்டிருக்கிறார். சில மாதங்களுக்கு முன்புதான் மகளிரணிச் செயலாளராக இருந்த கோகுல இந்திரா கழற்றிவிடப்பட்டு, வளர்மதி நியமிக்கப்பட்டார்.

பி.ஹெச்.பாண்டியன் அவைத் தலைவராவார் என்று பேச்சு அடிபட்ட நிலையில், மூத்த





# சதுரங்கம் ஆடும் தோழிகள்!

விசுவாசி மதுசூதனன் அந்தப் பதவியில் அமர்த்தப்பட்டார். பாண்டியனுக்கு மாநிலச் சிறுபான்மையோர் பிரிவுத் தலைவர் பொறுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. இவருடைய மகன் மனோஜ் பாண்டியன் வழக்கறிஞர் அணிச் செயலாளர். பதவி பிடுங்கப்பட்ட கோகுல இந்திராவுக்கு அமைப்புச் செயலாளர் பொறுப்பு கொடுக்கப்பட்டது. கட்சியில் இப்போது சுலோசனா சம்பத், விசாலாட்சி நெடுஞ்செழியன் உட்பட ஏழு அமைப்புச் செயலாளர்கள் உள்ளனர்.



* தளவாய் சுந்தரம்



* கலைராஜன்

இந்த மேல்மட்ட மாற்றங்கள் ஒரு பக்கமிருக்க, தமிழகம் முழுவதும் மாவட்டங்களில் உள்ள மாவட்ட நிர்வாகம், ஜெ. பேரவை, எம்.ஜி.ஆர். இளைஞரணி, வழக்கறிஞர் அணி, மீனவர் அணி, விவசாயிகள் அணி, அண்ணா தொழிற்சங்கம் ஆகிய அமைப்புகளில், பல்வேறு பொறுப்புகளில் இருந்தவர்கள் அதிரடியாக மாற்றப்பட்டிருக்கிறார்கள். நகரம், ஒன்றியம் வரை பொறுப்பாளர்கள் மாற்றப்பட்டுவிட, கீழ் மட்டங்களில் கசப்பும், கடுகடுப்பும் அணிவகுக்கின்றன.

இதுவரை பதினைந்துக்கும் மேற்பட்ட மாவட்டங்களில் நிர்வாகிகள் மாற்றப்பட்டு விட்டனர். மற்ற மாவட்டங்களிலும் இது தொடருமாம்! ஆனால், மாவட்டங்களில் மாற்றங்கள் செய்யும்போது மாவட்டச் செயலாளர்கள் கொஞ்சம் 'விளையாடி' விடுவதாகச் சொல்கிறார்கள் கட்சிக்காரர்கள்.

குறிப்பாக, தென் சென்னைப் பகுதியில் நிர்வாகிகள் நியமிக்கப்பட்டதில் நிறைய அதிருப்தி இருப்பதாகச் சொல்கிறார்கள். சேப்பாக்கம் திருவல்லிக்கேணி பகுதியில் நிறைய முணுமுணுப்புகள்! தொழிற்சங்கத்தில் சுறுசுறுப்பாகச் செயல்பட்ட விஜயராம கிருஷ்ணா என்பவரும் மாற்றப்பட்டிருக்கிறார். விசுவாசிகளும், திறமையானவர்களும் ஓரங்கட்டப்பட்டு விட்டதாகப் புலம்பல்கள்.

ஆனால், தி.மு.க.வுக்கு எதிராக சவுண்டு கொடுக்கிறார் என்பதால் கலைராஜன் பதவியில் நீடித்துக் கொண்டிருக்கிறார். இது போல ஒவ்வொரு மாவட்டத்திலும் ஏராளமான பிரச்னைகள். ''நாங்கள் நியமிக்கப்பட்ட அடுத்த ஒரு மணி நேரத்தில் எங்களுக்கெதிராக ஃபேக்ஸ் புகார்கள் போயஸ் தோட்டத்துக்குப் பயணிக்கத் துவங்கிவிடும். ஆனால் இதற்கெல்லாம் பயந்தால் வேலை செய்ய முடியாது'' என்று ஒரு மாவட்டச் செயலாளர் நம்மிடம் கூறினார்.

"மாற்றங்களினால் கட்சிக்காரர்களுக்கு வருத்தம் இருந்தாலும் கட்சி வளர்ச்சியை இது பாதிக்காது. உயிரோட்டத்துடன் இருந்து வரும் கட்சி இது. அம்மாவின் தலைமையும் கருணாநிதி எதிர்ப்பும்தான் எங்கள் தாரக மந்திரங்கள். அம்மாவை எதிர்த்த பலர் காணாமல் போய்விட்டார்கள் என்பதே வரலாறு" என்கிறார் எம்.ஜி.ஆர். காலத்தில் கட்சியில் சேர்ந்த மூத்த பிரமுகர். அ.தி.மு.க.வில் ஒவ்வொரு தொண்டருக்கும் ஜெவின் மீது ஆழ்ந்த பக்தி இருக்கிறது என்பதே உண்மை!

**"நாங்கள் நியமிக்கப்பட்ட அடுத்த ஒரு மணி நேரத்தில் எங்களுக்கெதிராக ஃபேக்ஸ் புகார்கள் போயஸ் தோட்டத்துக்குப் பயணிக்கத் துவங்கிவிடும். ஆனால் இதற்கெல்லாம் பயந்தால் வேலை செய்ய முடியாது"**

தனிநபர் வழிபாடு என்கிற பலவீனமான அஸ்திவாரத்தில் ஒரு கட்சி எத்தனை நாள் நீடிக்க முடியும்?

அட்டைப் படம் : **ஸ்ரீஹரி**
படங்கள் : ராஜன்

**விற்பனையாகிறது...** **விலை ரூ.12**



# கோபுர தரிசனம்

**சித்திரை சிறப்பிதழ்! ☆ ஏப்ரல் – 2007 மாத இதழ்**

- ☆ திருமால்பாடியில் பள்ளி கொண்டுள்ள பிள்ளைப்பேறு அளிக்கும் ஸ்ரீரங்கநாதன்! ☆ ஷீரடி சாயி பாபா யந்த்ரம்
- ☆ சென்னையில் அருள்பாலிக்கும் அன்னை மூகாம்பிகை!
- ☆ வாலாஜாபேட்டையில் ஸ்ரீசஞ்சீவி ஆஞ்சநேயர்!
- ☆ அரியக்குடியின் நம்பிக்கை நக்ஷத்திரம் அமரர் கே.வி.என்.
- ☆ திருக்குரக்குக்கா, திருமால்பாடி, இளநகர் தல வரலாறு
- ☆ இங்கிலாந்தில் ஸ்ரீ ராம்பாபா ஸ்வாமிகள் ☆ அக்ஷய திருதியை அற்புதங்கள் ☆ கீர்த்திமிகு தீக்ஷித மாமணிகள் கட்டுரை

**Dr. முருகு ராஜேந்திரனின் இராசி பலன்களுடன்**
**வரிக்கு வரி மனம் மகிழச்செய்யும் மாத இதழ்!**
**கூடுதல் பக்கங்களுடன் சித்திரை சிறப்பிதழாக மலர்கிறது!**
**இந்த இதழுடன் 'செல்வம் கொழிக்கும் மந்திரங்கள்'**
**ஸ்தோத்ர புத்தகம் இணைப்பு கேட்டு வாங்குங்கள்!**

**புதிய ஏரியாக்களில் ஏஜண்டுகள் விண்ணப்பிக்கலாம்.**

பரபரப்பான விற்பனையில்... (ரூ.12)



## கோபுர தரிசனம்

வழங்கும்

## சர்வஜித் வருஷ தமிழ்ப் புத்தாண்டு இராசி பலன்கள்

சர்வஜித் வருஷம் சித்திரை முதல் பங்குனி வரை 12 இராசிக்காரர்களுக்கும் ஏற்படக்கூடிய பலன்கள், விசேஷ பரிகாரங்களுடன் கணித்து வழங்கியவர்

ஜோதிஷ வித்வான் திருமலைக்காண்டூர்
**கிருஷ்ணமாச்சார்யார் ஸ்வாமி**




தனிப்பிரதி பெற ரூ.**15** M.O. செய்க

**ஸ்ரீராம் பப்ளிகேஷன்ஸ்**
M-11/F-4, Ragam Apts., I அவென்யூ ரோடு, திருவள்ளுவர் நகர்,
திருவான்மியூர், சென்னை – 600 041, தென் இந்தியா.
☎ : 2490 0603, 2490 0303, 2441 6122 மொபைல் : 9444116300, 9445127500

# பீமா...

**தினந்தோறும் தீபாவளி கொண்டாடியபடி இருக்கிறார் லிங்குசாமி. எல்லாம் 'தீபாவளி' படம் தந்த தீபாவளி வெற்றியால்தான்.**

"எந்த நேரத்துல அப்படியோர் டைட்டில் வச்சோம்னு தெரியல... தினம் தினம் தியேட்டர்ல திருவிழாதான். படம் ஹவுஸ்ஃபுல்லா போயிட்டிருக்கு. ஒரு தயாரிப்பாளரா நான் ரொம்ப ரொம்ப சந்தோஷமாயிருக்கேன். டைரக்டர் பாலாஜி சக்திவேல் சார் 'எழில்கிட்ட ஒரு நல்ல கதை இருக்கு. கேட்டுப் பாரு. நல்ல கம்பெனி இருந்தா சொல்லி விடு'ன்னு சொன்னாரு. நானும் என் தம்பியும் கதை கேட்டோம். எங்களுக்குப் பிடிச்சிருந்தது. எடிட்டர் மோகன் சார்கிட்டயும் எழில் இந்தக் கதையைச் சொல்லியிருக்காரு. அவங்களுக்கும் பிடிச்சிப்போக, உடனே நாங்களே தயாரிப்புல இறங்கத் தீர்மானிச்சோம். எழில் மேல எனக்கு எப்பவுமே அபார நம்பிக்கை உண்டு. அது இப்ப இன்னும் கூடியிருக்கு" என்ற லிங்குசாமி, தான் ஏன் தயாரிப்பாளர் ஆனோம் என்பதையும் விவரிக்கத் தவறவில்லை.

"நல்ல கதைகளைக் கேட்கும்போதும் திறமையான டைரக்டர்களைப் பார்க்கும்போதும் அவங்களுக்கெல்லாம் ஏதாச்சும் செய்யணும்னு எனக்குத் தோணிட்டே இருக்கும். ஒரு கட்டத்துல ஏன் நாமளே படம் தயாரிக்கக் கூடாது, இவங்களுக்கெல்லாம் வாய்ப்புத் தரக்கூடாதுன்னு யோசிச்சேன். முடிவு பண்ணிக் களமிறங்கினோம்... இதோ 'தீபாவளி' தூள் பரத்திட்டிருக்கு. ஆனா ஒண்ணு மட்டும் நிச்சயம்... நான் லாபம் சம்பாதிக்க படம் எடுக்க வரலை. நல்ல படம் எடுக்கணும், அவ்ளோதான்!"

"சரி, பீமாவில் என்னதான் நடக்குது... ஏன் படம் இவ்ளோ லேட்?"

"பீமான்னா பெரியவன்... பலசாலி... அவனை யாரும் எதுவும் பண்ண முடியாது. நின்னு நின்னு நிதானமா வந்தாலும் மனசுல நிக்கப் போறவனா வரப் போறான். பிரமாதமான விக்ரம்... அதிரடி த்ரிஷான்னு பவர்ஃபுல் கூட்டணி. பீமா பிச்சு உதறப்போறது நிச்சயம்" என்று நம்பிக்கையுடன் பேசியவர், தமது தம்பி சந்திரபோஸ் பற்றிச் சிலிர்த்துப் பேசினார்.

"தம்பி நல்ல ரசிகன். என்னோட எல்லாக் கதைகளையும் முதல்ல அவன்கிட்ட சொல்லித்தான் கருத்துக் கேட்பேன். அவனுக்கு டைரக்ட் பண்றதைவிட படம் தயாரிக்கறதுலதான் ஆர்வம் அதிகம். இருந்தாலும் எங்க பேனர்லயே அவன் ஒரு படம் பண்ண வாய்ப்பிருக்கு" என்றவரிடம்,

"அப்படியே காலப்போக்குல நீங்களும் ஹீரோவாயிடுவீங்கதானே...?" என்றால், ஒரேயடியாக மறுக்கிறார்.

"பள்ளிக்கூடத்துக்கு தங்கர் சார் நடிக்கக் கூப்பிட்டாரு... இன்னும் பலரும்கூட என்னை வற்புறுத்தினாங்க. ஆனா நான் மறுத்துட்டேன். எந்தச் சூழல்லயும் நான் நடிக்க வரவே மாட்டேன்... இது உறுதி!"



# ...நடந்தது என்ன?

விக்ரமுடன் லிங்குசாமி...

வழக்கமான கேள்வியை லிங்குவிடமும் நாம் கேட்கத் தவறவில்லை...

''பெரிய ஹீரோக்கள்தான் உங்களோட டார்கெட்டாவும் இருக்காங்க... புது ஆட்களைக் கண்டுக்கறதில்லையே...''

**"நான் லாபம் சம்பாதிக்க வரல... நல்ல படம் எடுக்கணும், அவ்ளோதான்!"**

''ஒண்ணு முதல்ல புரிஞ்சுக்கங்க... நான் ஹீரோவுக்குக் கதை பண்றவன் இல்ல... என் கதைக்குத்தான் ஹீரோவைத் தேடுவேன். கதைதான் படத்தோட உயிர் நாடி.. அதை சிறப்பா அமைச்சுட்டா போதும், வெற்றி நம் காலடியில்!''

**- ஆ.முத்துராமலிங்கம்**

**எங்கோ அமெரிக்காவில்தானே... நடக்கிறது நமக்கென்ன என்று இருந்துவிட முடியாது.**

# பாட்டி




**வா**ஞ்சையுடன் அந்தப் பாட்டியை உள்ளே அழைத்து ஏஸி அறையில் அமர வைத்தார் அந்த இன்ஷூரன்ஸ் அதிகாரி.

"உங்கள் பெயர்?"

"மேரி ரோஸ் டெர்க்ஸ்!"

"வயசு?"

"எண்பத்து ஒண்ணு."

"என்ன விஷயமா வந்திருக்கீங்க?"

"உங்ககிட்ட மெடிக்கல் பாலிஸி வாங்கியிருக்கேன். நிறைய செலவாயிடுச்சி. கையோடு பில்லையெல்லாம் கொண்டு வந்திருக்கேன்." . நடுங்கிக் கொண்டே சொன்னார் அந்தப் பாட்டி.

"அப்படியா" என்று அவரிடமிருந்து ஃபைலை வாங்கிக்கொண்டு பிறகு சொல்கிறோம் என்று அனுப்பிவிட்டார் அவர்.

ஆனால், இன்ஷூரன்ஸ் கம்பெனியிடமிருந்து பதில் வரவில்லை. 'மறந்திருப்பார்களோ?' திரும்பவும் ஒரு நடை சென்று பார்த்தார். 'மன்னிக்கவும், உங்களுக்குப் பணம் கிடைக்காது. ரத்தக் கொதிப்பு, டயாபடீஸ் இதெல்லாம் போதாது. ஏதாவது பெரிய பிரச்னையாக இருந்து, அதற்கு மருத்துவம் பார்த்திருந்தால் மட்டுமே பைசா திரும்பத் தரப்படும்" என்று சொல்லிவிட்டார்கள்.

அதிர்ந்துபோன அந்தப் பாட்டி, தான் தினந்தோறும் முப்பத்தேழு மாத்திரைகளை விழுங்குவதாகவும், சிறு வியாதிக்கு யாராவது இத்தனை மாத்திரைகள் சாப்பிடுவார்களா என்று கேட்டிருக்கிறார். 'ம்ஹூம்... மாட்டவே மாட்டோம்' என்று பிடிவாதமாக மறுத்து, அவரை வீட்டுக்கு அனுப்பிவிட்டார்கள். பணம் திரும்பக் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் அந்த மூதாட்டி செலவழித்தது 70,000 டாலர்கள். இப்போது இது காந்தி கணக்குதான்.

இவருக்கு மட்டுமல்ல... பல ஆயிரக் கணக்கான அமெரிக்கர்களுக்கு இன்று இதுதான் நிலைமை.

அமெரிக்காவிலுள்ள வெவ்வேறு இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் மீது பதிவு செய்யப்பட்டுள்ள பல ஆயிரக்கணக்கான புகார்கள், நீதிமன்றத்தில் குறட்டை

# -தாத்தா பாலிஸி!

விட்டுத் தூங்கிக் கொண்டிருக்கின்றன. அரைகுறையாகத் தருபவர்கள்கூட படு பயங்கரச் சோம்பேறிகளாக இருக்கிறார்கள். நடையாக நடந்து, கால் மேல் கால் போட்டு ஃபாலோ-அப் செய்தால்தான் உண்டு.

நினைத்தே பார்க்க முடியாத பல சிக்கல்களையும் அப்பாவி பாலிஸிதாரர்கள் சந்திக்க வேண்டியிருக்கிறது. உதாரணத்துக்கு மற்றொரு பாட்டி. மற்றொரு அதிகாரி. மற்றொரு ஏஸி அறை. 'எம்பெருமான் இன்ஷுரன்ஸ் இருக்கிறார்' என்னும் தைரியத்தில் செலவழித்துவிட்டுக் கத்தையாக பில்லைக் கொண்டுவந்து நீட்டினார். ஒரே பதில்தான் சொன்னார் அந்த அதிகாரி: 'ம்ஹூம்.'

ஏன் தெரியுமா? அந்த எண்பத்தைந்து வயதுப் பாட்டி விண்ணப்பத்தைச் சரியாகப் பூர்த்தி செய்யவில்லையாம். சில இடங்களை நிரப்பாமலேயே வைத்திருந்தாராம். தவிரவும், தேவையற்ற ஒரு சில இடங்களில் டிக் மார்க் அடித்துவிட்டாராம். ஆகவே, சட்டப்படி அவருக்கு நயா பைசா கிடையாது.

இன்னொரு உத்தமமான காரியத்தையும் இன்ஷுரன்ஸ் ஆட்கள் செய்திருக்கிறார்கள். தொண்ணூற்று இரண்டு வயது தாத்தா அவர். மரியாதைக்குரிய பாலிஸிதாரர். சிரத்தையாக ப்ரீமியம் கட்டுபவர். மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருக்கிறார். விண்ணப்பத்தையும் சரியாகவே நிரப்பிக் கொடுத்திருக்கிறார். டிக் அடிக்க வேண்டிய இடத்தில் மட்டும் டிக்.

கட்டிலில் படுத்துக்கொண்டே பில்லை அலுவலகத்துக்கு அனுப்பியிருக்கிறார். அவ்வளவுதான். கோட் சூட் அணிந்த நான்கு பேர் விர்ரென்று கிளம்பிப் போயிருக்கிறார்கள். ஆரஞ்சுப் பழமோ, ஆர்லிக்ஸோ கொடுத்து, குசலம் விசாரிக்க அல்ல. தாத்தாவைப் பார்த்துக்கொள்ளும் சம்பந்தப்பட்ட மருத்துவ அதிகாரியைச் சந்தித்துப் பேச. என்ன பேசினார்கள் தெரியுமா? "ஐயா, போதும்... தாத்தாவை வீட்டுக்கு அனுப்பி விடுங்கள். அவர் நன்றாகத்தான் இருக்கிறார். இங்கேயே தங்க வைத்தால் பில் எகிறுகிறது. தயவு செய்து உதவுங்கள்."

எப்படி இருக்கிறது கதை?

எங்கோ அமெரிக்காவில்தானே நடக்கிறது நமக்கென்ன என்று இருந்துவிட முடியாது. காரணம், அமெரிக்காவில் எது நடந்தாலும், ஒருநாள் விட்டு மறுநாள் இந்தியாவிலும் அந்தச் சங்கதி நடக்கும். அந்த அளவுக்கு நமக்கும் அமெரிக்காவுக்கும் ஒரு அந்நியோன்யம். ○



**நினைத்துப் பார்க்க முடியாத பல சிக்கல்களையும் அப்பாவி பாலிஸிதாரர்கள் சந்திக்க வேண்டியிருக்கிறது.**

புதுமை விரும்பிகளுக்கு...

# ரா.பார்த்திபனின்

# ஜிகினா

...இன்னும் அறிவிக்கப்படாத ஆச்சர்யங்களும் காத்திருக்கு!




மிஸ் பண்ணிடாதீங்க!



# கல்கி



2007 ஏப்ரல் 8
விய பங்குனி 25
மலர் : 65
இதழ் : 36

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## ஒன் டே கிரிக்கெட்டை ஒழித்துக்கட்டுங்கள்!

**பாப்** வுல்மரின் மரணம் கிரிக்கெட்டின் அனைத்து நற்பண்புகளுக்கும் ஒருங்கே சமாதிகட்டியிருக்கிறது.

'உலகளாவிய ஒரு சூதாட்ட வலைப்பின்னலின் ரகசியங்கள் வுல்மருக்குத் தெரியவந்ததால்தான் அவர் தீர்த்துக்கட்டப்பட்டிருக்கிறார்' என்பதே புலனாய்வின் அடிப்படை. இச் சந்தேகம் வலுப்படும் வகையில் வுல்மரின் நாட்குறிப்பிலிருந்து சில பக்கங்கள் மட்டும் நீக்கப்பட்டுள்ளன! அவரது கம்ப்யூட்டரின் ஹார்ட் டிஸ்க்கை இப்போது சோதனையிட்டு வருகிறது போலீஸ்!

பாகிஸ்தான், அயர்லாந்திடம் நம்ப முடியாத வகையில் தோற்றதும்கூட சூதாட்டம் மற்றும் அதன் துணைத் துரோகமான 'மேட்ச் ஃபிக்ஸிங்' பற்றிய சந்தேகங்களுக்கு இடமளிக்கின்றன.

இத்தனை விஷயங்களுக்கும் காரணம், கிரிக்கெட் ஆட்டம் இன்று வியாபாரமாகிப் போய்விட்டதுதான்.

வருடம் முழுதும் மேட்சுகள் - அதுவும் ஒரு நாள் பந்தயங்கள் - ஆட வேண்டும்; ஜெயித்தும் காட்ட வேண்டும் என்ற அழுத்தம் விளையாட்டு வீரர்களுக்கு;

ஒவ்வோர் ஆட்டத்திலும் எப்படி அதிகபட்சமாகப் பணம் சம்பாதிக்கலாம் என்ற பேராசை கிரிக்கெட் வாரியங்களுக்கு;

இந்தத் 'திருவிழா'வை எப்படி வியாபார அபிவிருத்திக்குப் பயன்படுத்தலாம் என்கிற விளம்பர நோக்கு






ஸ்பான்ஸர்களுக்கு ;

சரி, நாம் இவ்வளவு டென்ஷனில் ஆடுகிறோம், இவ்வளவு பேரும் இதிலே பணம் பண்ணுவது நாம் ஆடுவதால்தானே என்கிற ஆணவத்தில், தங்கள் விலையை உயர்த்திக் கொண்டு விளம்பரப் பொருளாகவே மாறிவிடுகிறார்கள் ஆட்டக்காரர்கள்.

இவ்வளவு போக்குகளும் தொலைக்காட்சி ஒளிப்பரப்பு காரணமாக மேலும் தீவிரமடைகின்றன.

ஐந்து நாள் பந்தயமாக, வருடத்துக்கு ஒரிரு முறை மட்டுமே கிரிக்கெட் மேட்சுகள் நடந்தபோது, சூது - வாதுக்கு இடமில்லை ; ரசிகர்களும் அமைதியாக ஆட்டத்தைப் பார்த்தார்கள்.

ஒரு நாள் பந்தயங்கள் அதிகரித்த பிறகு ஆட்டக்காரர்களுக்கும் டென்ஷன், ரசிகர்களுக்கும் டென்ஷன். போதாக்குறைக்கு, சூதாட்டப் புள்ளிகளுக்குக் கொண்டாட்டம்.

ஆட்டத்தின் கலையழகும் கண்ணியமும் ; ஐந்து நாட்களில் எந்தப் போக்கில் ஆட்டம் திரும்பினாலும் அதை ஏற்று, அதற்கேற்ப அணியும் தனி ஆட்டக்காரரும் அணுகுமுறையை மாற்றிக்கொள்ளும் இலாகவமும் ; ஒருங்கிணைந்து அணியாக இயங்கக் கிடைத்த சந்தர்ப்பங்களும் அவகாசமும்... எல்லாமே மாயமாகிவிட்டன. கிரிக்கெட், பல்வேறு நாடுகளிடையே ஜெயித்துக்காட்ட வேண்டிய ஒரு யுத்தம்போல் மாறிவிட்டது.

கிரிக்கெட் உணர்வைக் கொன்றுவிட்டு ஆட்டத்தை மட்டும் ஆடுகிறபோது நிகழக்கூடிய விபத்துதான் வுல்மர் கொலை போன்ற சம்பவங்கள்.

இந்த ஆட்டம் பிழைத்து, மேம்படச் செய்ய, ஒரு நாள் பந்தயங்களையே ஒழித்துக் கட்டுவதுகூட தப்பில்லை.

இல்லாவிடில், அயர்லாந்திடம் பாகிஸ்தான் தோற்பது போன்ற அபத்தங்களும் வுல்மர் கொலை போன்ற அக்கிரமங்களும் தொடரும். ●



# முதல் பார்வை... முதல் மதிப்பு...

கல்கி 11.3.2007 இதழின் இலவச இணைப்பில், 'நேர்முகத் தேர்வில் உங்களுக்குத் தெரியாத கேள்வியைக் கேட்டால் என்ன செய்வீர்கள்?' என்ற போட்டியை வைத்திருந்தோம். சிறந்த பதில்களின் அடிப்படையில் தேர்ந் தெடுக்கப்பட்ட ஐந்து பேருக்கு, பரிசா கத் தலா ரூ.200/- அளிக்கப்படுகிறது. இதோ அந்த பதில்கள்...

எனக்கு அந்தக் கேள்விக்கான பதில் ஓரளவு தெரியுமென்றால், தெரிந்த வரை கூறி 'இவ்வளவுதான் எனக்கு தெரியும். இன்னமும் இருக்கிறது விஷயம் என்று ஒப்புக்கொள்வேன். மீதியுள்ள பதிலை அவர்களே எனக்குச் சொல்லிக் கொடுப் பார்கள்.

**- எம்.கோமதி, சென்னை**

ஓரளவு தெரிந்தும் பதில் தெரியாது என்று சொல்வது தன்னம்பிக்கையின்மை யைக் காட்டும். முழு தாய்த் தெரிந்த மாதிரிச் சொல் வது அவநம்பிக் கையை ஏற்படுத்திவிடும். அதனால் தெரிந்தவரை தெளிவாகப் பதில் சொல்லி, இவ்வளவுதான் தெரி யும்' என்று சொல்வேன். உண்மைக் கும் நேர்மைக்கும் மதிப்பு உண்டு.

**- பா.கௌத்தம் அர்விந்த், திண்டுக்கல்**

இண்டர்வியூவில் முழுமையாகப் பதில் தெரியாத கேள்விகள் கேட்கப்படும் போது தெரிந்தவரை பதில் கூறி 'இவ் வளவுதான் எனக்குத் தெரியும்' என்று ஒப்புக் கொள்வதே நல்லது. நாம் உண்மை யைக் கூறுவதால் நம் மீதான நம்பகத் தன்மை அதிகரிக்கும்.

**- இரா.சாந்தகுமார், திருவள்ளூர்**

ஆங்கில இலக்கிய மேதை டாக்டர் சாமுவேல் ஜான்சன். அவர் எழுத்தில் ஒரு தப்பைக் கண்டுபிடித்த ஒரு சீமாட்டி யிடம், 'இக்னொரன்ஸ் மேடம், இக்னொ ரன்ஸ்' என்று கூறி உண்மையை ஒப்புக் கொண்டதாக அவரைப் பற்றிச் சொல்வ துண்டு. எந்த நேர்காணலிலும் உண்மைக் குத்தான் முதல் அங்கீகாரம் கிடைக்கும்.

**- ஜெயஸ்ரீ ஸ்ரீகாந்த், சென்னை**

Naked Truth என்பதால் நிஜம் நிர் வாணமாக நிற்கவிடக் கூடாது. பொய்க் குப் புனைந்துரை தேவை என்பதால் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கக் கூடாது. முதல் சந்திப்பி லேயே முதல் மதிப் பெண் பெறும்படி தெரிந்தவரை பதில் சொல்லி 'இவ் வளவுதான் எனக் குத் தெரியும்' என்று சொல்வதே பெஸ்ட்.

**- என்.சீதாலட்சுமி, பொள்ளாச்சி**

## போட்டி முடிவு





# ஹிந்து மஹா சமுத்திரம்

வேதங்கள், உபநிஷத்துக்கள், வேதாந்தம், சாத்திரம், புராணங்கள், ஆலயங்கள், பக்தி, சரித்திரம், நீதி, சட்டம், சமூக சிந்தனை, விஞ்ஞானம், கணிதம், இலக்கியம், வான சாத்திரம் என்று விரிந்து... ஆழ்ந்து, அகன்ற இந்த சமுத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவரின் பிரமிப்பு!

முதல் பாகம் விலை. ரூ.175/-

## சோ எழுதிய மஹாபாரதம் பேசுகிறது

பாரதக் கதை பழமை வாய்ந்தது. ஆனால் அதை எழுதியிருக்கும் விதம் மிகவும் புதுமையானது. 1304 பக்கங்களில்; வியாச பாரதத்தின் சுருக்கம்; 18 பர்வங்களில் வரும் முக்கிய நிகழ்ச்சிகள்; பாரதக் கதை நடந்திருக்கக்கூடும் என்பதற்கான வழக்கறிஞர் 'சோ'வின் ஆணித்தரமான வாதம்; பலரும் கேட்டிராத நுணுக்கமான அரிய தகவல்களை விளக்கி; முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங்களையும் விமர்சித்து, இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் விதம் புதுமையானது.

இரண்டு பாகங்கள் - விலை ரூ.600/-

## வால்மீகி ராமாயணம்

வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட ராமாயணம் எனும் இதிஹாசத்தை - சுருக்கமாகவும், மிகவும் எளிய நடையிலும் சோ அவர்கள் எழுதியுள்ளார். மேலும் சில முக்கியமான இடங்களில் வால்மீகி ராமாயணம் - கம்ப ராமாயணம் மற்றும் துளசிதாஸரின் ராமாயணங்களை விட எப்படி வேறுபட்டுள்ளது என்பதையும், அப்படி விளக்கும் போது ஆங்காங்கே கம்பரின் வாக்கியத்தி லுள்ள தமிழ் அழகையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

விலை ரூ.500/-

## இந்து தர்மம்

விலை ரூ.60/-

காஞ்சி காமகோடி பூஜ்ய ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் அருளுரைகளின் சுருக்கம்.

## அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்

ராஜாஜி, மொரார்ஜி தேசாய், இந்திரா காந்தி, சந்திரசேகர், அத்வானி, காமராஜ், அண்ணாதுரை, எம்.ஜி.ஆர், கருணாநிதி, என்.டி.ஆர்., ஜெயலலிதா போன்ற ஏராளமான அரசியல் தலைவர்கள், மற்றும் சினிமா, பத்திரிகைப் பிரமுகர்களுடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை விளக்கியுள்ளார் விலை ரூ.90/-

## கருத்தாழம் மிக்க நகைச்சுவை நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 35.00 |
| 2. | இந்து தர்மம் | 65.00 |
| 3. | வந்தே மாதரம் | 115.00 |
| 4. | வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 |
| 5. | சர்க்கார் புகுந்த வீடு | 100.00 |
| 6. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 |
| 7. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 45.00 |
| 8. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 27.00 |
| 9. | துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 |
| 10. | அதிகப் பிரசங்கம் | 32.00 |
| 11. | இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | |
| 12. | யாரோ இவர் யாரோ? | 65.00 |
| 13. | சாதல் இல்லையேல் காதல் | 80.00 |
| 14. | மையியர் பிரம்ம தேவா | 30.00 |
| 15. | இந்தியா எங்கே போகிறது? | 20.00 |
| 16. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 1 | 24.00 |
| 17. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 2 | 45.00 |
| 18. | ஒண்ணரை பக்க நாளேடு பாகம் 1 | 40.00 |
| 19. | காமராஜை சந்தித்தேன் | 60.00 |
| 20. | புரட்சி கீதை | 35.00 |
| 21. | திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 |
| 22. | யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 23. | சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 24. | எங்கே போகிறாய்? | 40.00 |
| 25. | என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 26. | இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 27. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 28. | சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 29. | சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 30. | ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 31. | நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 32. | மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 33. | ஏன் கூடாது? | 40.00 |
| 34. | இரவில் சென்னை | 40.00 |
| 35. | முகமது பின் துக்ளக் | 35.00 |
| 36. | உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 37. | சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 38. | எதற்காக? | 35.00 |
| 39. | உண்மையே உன் விலை என்ன? | 37.00 |

| | | | |
|---|---|---|---|
| 1. ஸ்மைல் ப்ளீஸ் | - | சத்யா | ரூ. 40.00 |
| 2. அரசியல் கலையை அறிந்து கொள்வோம் | - | " | ரூ. 40.00 |
| 3. நையாண்டிக் கட்டுரைகள் | - | " | ரூ. 40.00 |
| 4. அரசியலும் நகைச்சுவையும் | - | " | ரூ. 32.00 |
| 5. நாடு தழுவிய நகைச்சுவை | - | " | ரூ. 50.00 |
| 6. மாடசாமியின் மனசாட்சி | - | " | ரூ.100.00 |

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)




ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால்பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை - 4. தொலைபேசி : 24641314
e-mail : www.alliancebook.com
visit us at: Srinivasan@alliancebook.com




ஷேவாக் மீண்டும் ஜலிப்பார். டோனி ஒழிப்பார். டெண்டுல்கர் உலகக் கோப்பையை அள்ளுவார் என்று மனப்பால் குடித்த இந்தியாவின் உலகக் கோப்பைக் கனவு இப்போது மணல் வீடு போல தூள் தூளாகியிருக்கிறது. அதிகாலை அரைச் சோம்பலில் இந்திய ரசிகர்கள் இந்த மண் குதிரைகளை நன்கு உணர்ந்துவிட்டார்கள் - இனியும் இவர்களை நம்பி ஆசைகளை வளர்த்துக் கொள்வதில்லை என்று.

வெளியே கசியாமல் வெளிச்சம் விழாமல் பல நூறு திறமைகள் உள்ள




தேசம் இது. பல்வேறு முட்டுக்கட்டைகளால் தேர்வாகாமல் எத்தனையோ பேர் மூலையில் புகைந்து கொண்டிருக்கிறார்கள். உள்ளே நெருப்பு இருப்பது நிச்சயம். இத்தனை ஆண்டுகளாக சச்சினும் டிராவிடும் கங்கூலியும் ஷேவாக்கும் கொண்டு வந்து கொட்டிய சாதனைகளும் கோப்பைகளும் அமரத்துவம் பெற்றவை அல்லவா! இனியும் அவர்கள் மீது விழுந்து கொண்டிருக்கும் வெளிச்சத்தை அணைத்து விட்டுத் தகுதியான சாமுராய்களைத் தேடுவதுதான் உசிதம். பின்வரும் இளைஞர்களை தைரியமாகத் தேர்வு செய்து, 2011 உலகக் கோப்பைப் போருக்குத் தயார் செய்யலாம்.

# மண் குதிரைகள் இனியும் தேவையா?

**எஸ்.எஸ்.பால்** - இருபத்தைந்து வயது பெங்கால்காரர். இவருக்கு ஒரு பவுன்சர் இலவசம் என்று ஐ.சி.சி. அள்ளிக் கொடுத்தும் அந்த இலவசத் தற்காப்புக் கருவியைப் பயன்படுத்தத் தெரியாதவர்கள் நம் பிரகஸ்பதிகள். ஆனால் பாலுக்கு பவுன்சர்தான் ஆயுதம். 2003ஆம் வருட ரஞ்சியில்

ஐம்பது விக்கெட்டுகளை அள்ளினார். பரோடோவுக்கு எதிரான ஒரு மேட்சில் கடும் ஜுரத்தோடு பந்துவீசி ஐந்து விக்கெட்டுகள் எடுத்திருக்கிறார். இருபத்துமூன்று வயதில் ஸ்லோ மோஷனில் பீல்டிங் செய்யும் முனவ் படேலை டெஸ்ட் மேட்சுக்கு மட்டும் வைத்துக் கொள்ளலாம்.

**ரணதீப் போஸ்** - இருபத்தெட்டு வயது. உயரத்தில் ஆறடிக்கு நாலு அங்குலம் அதிகம். சமீபத்திய பரபரப்புக்காரர். எட்டு ரஞ்சி மேட்சில் ஐம்பத்தேழு விக்கெட்டுகள். பத்தாயிரத்துக்கும் அதிகமான பந்துகள் வீசி ஒரு நோ பால் போடாத அளவுக்கு பவுலிங்கில் ஓர் ஒழுங்கு. இந்நேரம் இந்தியாவின் அடுத்த கபில்தேவ் போஸ்ட்டை நிரப்பியிருக்க வேண்டியவர். அகர்கருக்கு (இப்பொழுதாவது) விருப்ப அல்லது கட்டாய ஓய்வு கொடுத்து, போஸை அந்த இடத்தில் அமர்த்தினால் அணி உருப்படும்.




**பத்ரிநாத்** - தமிழ்நாடு கிரிக்கெட்டின் ஒரே வைரம். இருபத்தேழு வயதில் ஸ்டேட் கேப்டன். துடிப்பான ஃபீல்டர். எந்நேரமும் எங்காவது நூறு அடித்துக் கொண்டிருப்பார். கால்மாட்டில் பூமி தாலாட்டுவதுபோல ஆட்டம் பார்க்க அவ்வளவு சுகமாக இருக்கும். ஸ்ரீதரன் ஷரத்தை இந்திய அணி அலட்சியப்படுத்திவிட்டது. அந்தக் கொடூரம் பத்ரிநாத்துக்கும் நேர்ந்துவிடக் கூடாது. ஷேவாக் சிறிது காலம் கவுண்டி, ரஞ்சி ஆட்டங்கள் ஆடி கிரிக்கெட் பழகட்டும்.

**இஷாந்த் சர்மா** - பதினெட்டு வயது. டெல்லி ஜாகை. ஆறடி நாலங்குலம் உயரம். தென் ஆப்பிரிக்கா டூரின்போது இஷாந்தை அவசரத்துக்கு அழைத்துக் கொள்ளலாமா என்று பெரிய விவாதமே நடந்தது. ஒன்னு ஒன்டே மேட்ச் தவறாமல் உதை வாங்கும் 'இந்திய கிரிக்கெட் அணியின் மைக்கேல் ஜாக்ஸன்' ஸ்ரீஷாந்துக்கு, இஷாந்த் ஒரு நல்ல மாற்று ஏற்பாடு.

**ரோஹித் சர்மா** - பத்தொன்பது வயது மும்பை இளமொட்டு. ஒரு ரஞ்சி ஆட்டம் ஆடாமலேயே ஜுனியர் உலகக் கோப்பையில் அடித்து ஆடி நிறைய கவனம் பெற்றவர். ஒவ்வொரு மீட்டிங்கிலும் இவரை மறக்காமல் பேசுவார்கள். ஆனால் தேர்வு செய்ய மாட்டார்கள். மும்பையிலிருந்து பதினாறு வயதில் ஆடக் கிளம்பி பழம்பெருமை பேசும் வீரரை, அதே ஜில்லாவிலிருந்து கிளம்பும் ஒருவரை வைத்து வீட்டுக்கு அனுப்புவதுதான் பொருத்தம்.

- ச.ந.கண்ணன்




**வெளியே கசியாமல் வெளிச்சம் விழாமல் பல நூறு திறமைகள் உள்ள தேசம் இது.**

## கல்வி அறிவு நிறைந்த சரஸ்வதிதான்
## லட்சுமி மணாளனின் உருவத்தை வருணிக்க வல்லவள்



இறைவனை ஆண்பாலாகச் சொல்வதையே இப்போதெல்லாம் கேள்வி கேட்கிறார்கள். இறைவன் எப்படி இருப்பான்? வெள்ளையா சிவப்பா, பச்சையா கறுப்பா... என்ன அவன் உருவம்? இதை யார் அறிவார், யாரால் சொல்ல முடியும் என்று கேட்டுவிட்டு பேயாழ்வார் அருமையாக ஒரு பதில் சொல்கிறார்.

இயற்பாவின் மூன்றாம் திருவந்தாதியில் வருகிறது இந்த வெண்பா:

# இறைவனுக்கு நிறம் உண்டா?

## வாரம் ஒரு பாசுரம்

**'நிறம் வெளிது, செய்து, பசிது,**
**கரிது என்று**
**இறை உருவம் யாம் அறியோம்,**
**எண்ணில் - நிறைவுஉடைய**
**நா-மங்கை தானும் நலம்**
**புகழ வல்லளே**
**பூ மங்கை கேள்வன் பொலிவு?**

(வெளிது - வெள்ளை, பசிது-பச்சை, செய்து - சிவப்பானது, கரிது - கறுப்பானது, நாமங்கை - சரஸ்வதி, பூமங்கை - லக்ஷ்மி, கேள்வன் - கணவன், பொலிவு - உருவம், அழகு)

இறைவன் வெளுப்பா சிவப்பா பச்சையா கறுப்பா என்று அவன் உருவத்தை என் போன்றவர்களால் சொல்ல முடியாது. எண்ணிப் பார்த்தால் கல்வி அறிவு நிறைந்த சரஸ்வதிதான் லட்சுமி மணாளனின் உருவத்தை வருணிக்க வல்லவள்.

பிரம்மனின் நாக்கில் சரஸ்வதி உறைவதாகச் சொல்வார்கள். அதனால் அவள் நாமங்கை. தாமரைப்பூவில் பிறந்தவள் என்று லக்ஷ்மியைச் சொல்வார்கள். அதனால் அவள் பூமங்கை. இந்தப் பாடலில் சரஸ்வதி கல்வியின், அறிவின், திட்சண்யத்தின் குறியீடு. 'இறைவனை இத்திறத்தவன் என்று சொல்வதற்கே சரஸ்வதியின் அறிவு முதிர்ச்சி வேண்டும். இறைவன் கறுப்பா சிவப்பா என்கிற கேள்விக்கெல்லாம் அவளால்தான் பதில் சொல்ல முடியும்' என்கிறார் பேயாழ்வார்.

அவளைக் கேட்டால், இந்தக் கேள்வியெல்லாம் அர்த்தமற்றது என்று சொல்லலாம். இறைவன் உருவமுள்ளவனா அற்றவனா என்ற கேள்வியை எல்லா நம்பிக்கைகளும் கேட்டு விடைதர முயல்கின்றன. திருக்குரான் - In the name of God, the Merciful, the Compassionate. Say (O Muhammad) He is God the One God, the Ever-lasting Refuge, who has not begotten, nor has been begotten, and equal to Him is not anyone." என்கிறது.

திருமங்கையாழ்வார் 'பின்உருவாய் முன்உருவில் பிணிமூப்பில்லாப் பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாத'வன் என்று இறைவனை வருணிக்கும்போது ஏறக்குறைய இதே கருத்து வெளிப்படுகிறது. நம்மாழ்வார் ஏக மூர்த்தி இரண்டு மூர்த்தி மூன்று மூர்த்தி பலமூர்த்தி என்பதுடன் உருவங்களுடன் அருவும் ஆகி என்று சூட்சும வடிவத்தையும் விட்டுவைக்கவில்லை.

வடிவமோ வடிவமற்றதோ நம்பினால் சரி!

(படிக்கலாம்)

**சுஜாதா**

## - விவசாயிகள் குமுறல்

'காடு விளைஞ்சென்ன மச்சான் நமக்கு கையும் காலும்தானே மிச்சம்' என்று நாடோடி மன்னன் திரைப்படத்தில் ஒரு பாட்டு. காடு விளைஞ்சே அந்தக் கதி என்றால், கடந்த 12 ஆண்டுகளாகக் கடுமையான வறட்சி மற்றும் விளை பொருட்களுக்கு இலாபகரமான விலை கிடைக்காததால் இலட்சக்கணக்கான தமிழக விவசாயிகள் இடிந்து போய் நிற்கிறார்கள்.

"நன்கு விளைச்சல் இருந்தாலும்கூட 15 ஏக்கர் வைத்திருக்கும் விவசாயி ஒருவரின் வருட வருமானம் ரூபாய் 30,000 தான். அரசின் கடைநிலை ஊழியர்கூட வருடம் 80,000 ரூபாய் பெறுகிறார்.



• வீரபாண்டி ஆறுமுகம்

தமிழக அரசு கூட்டுறவு வங்கிகளில் வாங்கிய கடனைத்தான் ரத்து செய்தது. ஆனால், தமிழகத்தில் உள்ள மூன்று கோடி விவசாயிகள் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் 5000 கோடி கடன் வாங்கியிருக்கிறார்கள். அதையும் ரத்து செய்ய வேண்டும். இல்லையேல் மகாராஷ்டிர மாநிலத்தைப் போல இங்கேயும் விவசாயிகள் தற்கொலை செய்து கொள்ளும் ஆபத்து இருக்கிறது'' என்று சைரன் ஊதுகிறார் பாரதிய




கிசான் சங்கத்தின் மாநிலப் பொதுச் செயலாளரான பி.அய்யாக்கண்ணு.

தமிழக அரசின் நிதிநிலை அறிக்கை தாக்கல் செய்யப்படுவதையொட்டி, விவசாயிகள் பங்குபெற்ற கலந்துரையாடல் நிகழ்ச்சியொன்று சென்னையில் கடந்த வாரம் நடந்தது. தமிழக அரசு நியமித்துள்ள விவசாய வளர்ச்சிக் குழுவின் துணைத் தலைவரும், முன்னாள் சட்டமன்ற உறுப்பினருமான கே.எஸ்.அழகிரியின் முயற்சியில் நடந்தது இந்தக் கூட்டம். வேளாண் துறை அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் முன்னிலையில், தங்கள் குமுறல்களைக் கொட்டித் தீர்த்தனர் விவசாயிகள்.

"கரும்பு விவசாயிகளின் கண்ணீர் கதையைக் கேட்டால் இரும்பு இதயங்களும் உருகிவிடும். ஒரு கிலோ சர்க்கரை உற்பத்தி செய்ய நாம் செலவழிக்கும்

தண்ணீர் 1000 லிட்டர். கிணறு அல்லது போர் கிணறு இருந்தாலும் பாதி நேரம் மின்சாரம் இருக்காது. அரசு எந்த விதி முறைகளைக் கொண்டு வந்தாலும், தனியார் சர்க்கரை ஆலை முதலாளிகள் தங்களுக்குச் சாதகமாக வளைத்து, விவசாயிகளின் வயிற்றில் அடிக்கிறார்கள். 8.5 சத விகிதம் பிழிதிறன் உள்ள கரும்புக்குக் கொடுத்து வந்த விலையை, ஒன்பது சதவிகித பிழிதிறன் என்று மாற்றியதால் தமிழகக் கரும்பு விவசாயிகளுக்கு நஷ்டம் ரூபாய் 150 கோடி. பயிர்க் காப்பீடு முழுவதுமாகக் கிடைப்பதில்லை. அரசு நேரடிக் கொள்முதல் செய்யும்போது நெல்லில் ஈரப்பதம் என்றாலும் எடுத்துக் கொள்ள வேண்டும்" என்றார் ஆர்.வி.கிரி என்ற விவசாயி.




# வாட்டும் வறுமை... கசக்கும் கரும்பு!

**"கரும்பு விவசாயிகளின் கதையைக் கேட்டால் இரும்பு இதயங்களும் உருகிப் போகும்!"**

விவசாய சங்கத் தலைவர் தணிகாசலம் எடுத்த எடுப்பிலேயே சூடாகிவிட்டார். "எங்களைப் பொறுத்தமட்டில் கரும்பு கசக்குது என்றுகூடச் சொல்லலாம். முன்பெல்லாம் சர்க்கரை தயாரிக்கும்போது கிடைக்கும் கழிபொருளான மொலாஸஸ் பயன்பாடு மிகவும் குறைவாக இருந்தது. ஆனால், இன்று எரிசாராயம் மற்றும் மின் உற்பத்திக்கு இலாபகரமாகப் பயன்படுகிறது மொலாஸஸ். எனவே ஆலை முதலாளிகள் மொலாஸஸ் விலையையும் கணக்கிலெடுத்துக் கொண்டே கரும்புக்கு விலை கொடுக்க வேண்டும். அந்த வகையில் டன் ஒன்றுக்கு வடக்கே சில மாநிலங்களில் 1800 ரூபாய் வரை கொடுக்கிறார்கள். ஆனால் தமிழகத்தில் வெட்டுக் கூலி, லாரி வாடகை இல்லாமல் கொடுக்கும் பணம் ரூபாய் 1100தான். எப்படி இது கட்டுப்படியாகும்? டிராக்டர் வாங்கலாம் என்றால், கடனுக்கு வட்டி விகிதம் அதிகம். ஆனால், சொகுசு கார்களுக்கு வட்டி விகிதம் குறைவு. உண்மையிலேயே விவசாயிகளின் நலனில் மத்திய, மாநில அரசுகளுக்கு அக்கறை இருந்தால் இப்படி இருக்குமா?" என்றார்.

தண்ணீர், மின்சார தட்டுப்பாடு காரணமாகத் தவித்து நிற்கும் வேளாண் துறை, இப்போது சந்திக்கும் மற்றொரு சவால் ஆள் தட்டுப்பாடு. ஆங்காங்கே மாவட்டத் தலைநகர் மற்றும் தாலுகா தலைநகரில் உள்ள தொழிற்சாலையில் வேலை செய்ய பஸ்கள் மூலம் கிராமங்களிலிருந்து



ஆட்களைக் காலையிலேயே அழைத்துக் கொண்டு போய் விடுகிறார்களாம்.

"இந்தச் சூழலில் வேளாண் துறையில் இயந்திரமயமாக்குதல் என்பது காலத்தின் கட்டாயம். எனவே வேளாண் கருவிகளுக்கு இறக்குமதி மற்றும் சுங்கத் தீர்வை நீக்கப்பட வேண்டும். வேளாண் ஆராய்ச்சித் துறையில் இந்த வகையில் கண்டுபிடிக்கப்படும் கருவிகள், உடனடியாகக் களத்துக்கு வர வேண்டும்" என்றார் தி.மு.க. விவசாய அணிச் செயலாளர் கே.பி.ராமலிங்கம்.

**வா**ழை விவசாயிகளின் கொந்தளிப்பு இன்னொருபுறம். "வலுத்தவன் தான் வாழை போடுவான் என்று சொல்லுவார்கள். அந்த அளவு வாழைக்குத் தண்ணீரும் பராமரிப்பும் தேவை. தவிர, காற்று, மழை என்று இயற்கை ஆபத்தும் இருக்கிறது. கட்டுப்பாடான விலை இல்லாததால் பெரும் நஷ்டத்துக்கு ஆளாகிக் கொண்டிருக்கிறோம். வாழைப் பழமும் இயற்கைச் சத்துக்கள் கொண்டது என்பதால் சத்துணவில் வழங்க வேண்டும்" என்றனர் வாழை விவசாயிகள்.

"ஒரு கண்ணுக்கு வெண்ணெய், மற்றொரு கண்ணுக்குச் சுண்ணாம்பு என்னும் நிலைதான் இங்கு நிலவுகிறது. நெல்லுக்கு உற்பத்திச் செலவும் அதிகம்; அது விளையும் பரப்பளவும் அதிகம். ஆனால் கோதுமைக்கு, நெல்லைவிட 250 ரூபாய் கூடுதல் விலை கொடுக்கிறார்கள். பருப்பு வகைகள் மற்றும் எண்ணெய் வித்துக்கள் ஆகியவற்றை அதிக விளைச்சல் இருக்கும்போது விவசாயிகள் பெருமளவில் வாங்கி அரசுக் கிடங்குகளில் வைத்து, பற்றாக்குறை ஏற்படுத்தி, பின்னர் கூடுதல் விலைக்கு விற்றுக் கொள்ளை லாபம் அடிக்கிறார்கள். கிடங்கில் இருக்கும் சரக்குக்கு வங்கியில் பணமும் பெறுகிறார்கள். இந்தப் பதுக்கல் வியாபாரம் சட்டரீதியாகவே நடக்கிறது. இந்த நிலையைச் சரிப்படுத்த வேண்டியது நம் கடமை அல்லவா! தமிழ்நாட்டில் 52 சதவிகிதம் வானம் பார்த்த பூமி. சொட்டு நீர்ப் பாசனத்தைத் தீவிரமாகக் கையாண்டால் எங்கும் பசுமை செழிக்கும். சீனாவில் ஒரு மாவட்டம் முழுக்க எண்ணெய் வித்துக்கள் போட ஊக்குவிப்பார்கள். மற்றொரு மாவட்டத்தில் பருப்பு வகைகளைப் போடுவார்கள். வேளாண் துறை இது போல இங்கேயும் வழிகாட்டிச் செயல்பட்டால் விவசாயம் வளர்ந்தோங்கும்" என்றார் கே.எஸ்.அழகிரி.



• கே.எஸ்.அழகிரி



• கே.பி.ராமலிங்கம்

**"சர்க்கரை ஆலை முதலாளிகள் விவசாயிகளை ஏமாற்றாத வகையில் சட்டப் பாதுகாப்பு கொண்டு வரப்படும்!"**

இறுதியாகப் பேசிய அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகத்துக்கு தர்மசங்கடமான நிலை. அடுத்த ஓரிரு தினங்களில் பட்ஜெட் தாக்கல் செய்யப்பட இருந்ததால் என்ன சொல்வது என்ற குழப்பம் அவருள் ஏற்பட்டதைப் புரிந்துகொள்ள முடிந்தது. "சர்க்கரை ஆலை முதலாளிகள் விவசாயிகளை ஏமாற்றாத வகையில் சட்டப் பாதுகாப்புகள் கொண்டு வரப்படும். விவசாய மான்யக் கோரிக்கையில் உங்கள் கோரிக்கைகளைப் பரிவுடன் பரிசீலிப்போம்" என்றார் அமைச்சர்.

- ப்ரியன்

படங்கள்: ராஜன்

# ஒரு ரூபாய் மருத்துவம்!






"ஏலே... சின்னக்காளை! ஒத்த ரூவா இருந்தாக் குடுத்துட்டுப் போடா!"

"எதுக்கும்மா கேக்குறே...?"

"இரண்டு நாளா வறட்டு இருமலா இருக்கு. ராவானா தூங்க முடியல. அதான் டாக்டர் கிட்டே போய்ட்டு வரலாமுன்னு!"

"அதுக்கு ஒத்த ரூபா வாங்கி என்ன பண்ணுவே? டவுன் பஸ்ல கூட ஏத்திக்கிட மாட்டாங்கம்மா!"

"நம்ம நெல்லை ரயிலடி பக்கத்துல, ஒத்த ரூபாய்க்கு மருத்துவம் பாக்குறாங்களாம். போயி பார்த்துட்டு வர்றேன்டா" என்று சொன்ன தன் அம்மாவை வியப்புடன் பார்த்தபடி ஒரு ரூபாய் நாணயம் ஒன்றினை எடுத்துத் தருகிறார் சின்னக்காளை.

நெல்லை, ரயில் நிலையம் அருகே பெருமாள் வடக்கு ரத வீதியில் இயங்கி வருகிறது ஜெயம் பாலி கிளினிக். இங்குதான் பொது மக்களுக்கு ஒரு ரூபாய்க்கு மருத்துவம் பார்க்கப்படுகிறது. இம் மருத்துவமனையின் நிர்வாகி நாராயணன். பல், கண், காது, மூக்கு, தொண்டை மற்றும் பொது நலன் சார்ந்த அந்தந்தப் பிரிவு மருத்துவர்கள் அவ்வப்பொழுது இங்கு வந்து மருத்துவ ஆலோசனை தந்து வருகின்றனர். புறநோயாளிகளாக மட்டுமே இங்கு வந்து பயன்பெற்றுச் செல்ல முடியும். நோயாளிகளுக்கான படுக்கை வசதிகள் இங்கு இல்லை.

பரிசோதனைக்குப் பின் நோயாளிகள் ஒவ்வொருவருக்கும் ஊசி மற்றும் மருந்து மாத்திரைகள் தரப்படுகின்றன. ஒரு டாக்டரும் நர்ஸும் இதற்கென மாதச் சம்பளத்தில் பணியமர்த்தப்பட்டிருக்கின்றனர். இவர்களது சம்பளம் மற்றும் மருந்து மாத்திரைகளுக்கென மாதம் சுமார் முப்பதாயிரம் ரூபாய் செலவாகிறதாம். இந்த மொத்தச் செலவினையும் ஏற்று வருகிறார் காரைக்குடியில் வசித்து வரும் மல்லிகா மீனாட்சி சுந்தரம். வங்கி ஒன்றில் அதிகாரியாகப் பணியாற்றி வந்த மீனாட்சி சுந்தரம் இயற்கை எய்த, அவரது ஞாபகார்த்தமாக இந்த எளிய மருத்துவ சேவையினைச் செய்து வருகிறார் அவருடைய மனைவி மல்லிகா மீனாட்சிசுந்தரம்.

ஞாயிறு தவிர, பார்வை நேரமான தினசரி மாலை ஐந்தரை மணியிலிருந்து இரவு எட்டு மணி வரை இங்கு கூட்டம் அள்ளுகிறது.

- திருநாவு




# தீ பரவிய திகில் நிமிடங்கள்!

## ஆக்ஷன் ஸ்டார் ஜீவா

கொடைக்கானலில் 'டால்பின் நோஸ்' என்றொரு உச்சி முனை வெகு பிரபலம். அங்கிருந்து கீழே பார்த்தால் பலருக்கும் தலை சுற்றும். அந்த இடத்தில் நான் ஒற்றைக் காலில் நின்றுகொண்டு தியானம் செய்வது போன்ற ஒரு காட்சி 'ராம்' படத்தில் இடம்பெறும். அந்தக் காட்சியை எடுத்தபோது, ஒற்றைக் காலில் நின்று நான் கண்களை மூடிக்கொண்டதும், கால்கள் தளர்ந்து, அப்படியே அதலபாதாளத்தில் விழுவது போன்ற ஓர் உணர்வு ஏற்பட்டது. என்னையும் அறியாமல் என் கால்கள் நடுங்க ஆரம்பித்தன. உடனே என் அம்மாவுடன் பேச வேண்டும் போல் தோன்றியது. போன் பண்ணினேன். அவரது குரலைக் கேட்டதும் எனக்குப் படபடப்பு குறைந்தது. அதேகணம், 'நம்முடைய பதற்றமான நிலைமையைப் பற்றி அம்மாவிடம் சொல்லி அவரை வீணாகக் கலவரப்படுத்த வேண்டாம்' என்ற எண்ணமும் ஏற்பட்டது. 'ஒண்ணுமில்லை அம்மா, சும்மாத்தான் போன் பண்ணினேன்'' என்று சொல்லிச் சமாளித்து விட்

டேன். என்னுடைய பதற்றத்தைக் கவனித்துவிட்ட டைரக்டர் அமீர், 'ஜீவா! ஒற்றைக் காலில் நிற்பது மாதிரி வேண்டாம். அதற்குப் பதிலாக உட்கார்ந்து கொண்டு தியானம் செய்வதுபோல் எடுத்துக் கொள்ளலாம்' என்று சொல்லிவிட, நான் 'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டேன்.

'ராம்' படம் ரிலீசான பிறகு டால்பின் நோஸ் பாறைக்கு 'ராம் பாறை' என்றே பெயர் சூட்டியது தனிக் கதை.

**'ரா**ம்' படம் முடிவதற்கு முன்பாகவே, இயக்குநர் ஜனநாதன் என்னிடம் 'ஈ' படத்தின் கதையைச் சொன்னார். அந்தக் கதாபாத்திரம் எனக்கு மிகவும் பிடித்துவிட, 'ராம்' படத்தை முடித்தவுடன், 'ஈ' படத்தை ஆரம்பித்து விடலாம் என்று சொல்லிவிட்டேன். அதன்படி ஜனநாதன், 'ஈ' படத்தின் ஸ்கிரிப்டைத் தயார் பண்ணிக்கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார். 'ராம்' படம் முடிந்து, 'ஈ' படம் ஆரம்பிப்பதற்கு முன் கிடைத்த இடைவெளியில் ஒரு நண்பரின் அழைப்பின் பேரில் மலேஷியாவில் ஒரு கலைநிகழ்ச்சியில் கலந்துகொண்டு திரும்பினேன். 'ஈ'யில் நானும், நடிகர் பசுபதியும் நடித்தது உங்களுக்கெல்லாம் தெரியும். ஆனால், அந்தப் படத்தில் நடிப்பதற்கு முன்னாலிருந்தே எனக்கு பசுபதியை நன்றாகத் தெரியும். அவர் மூலமாக எனக்குக் கூத்துப்பட்டறைக் குழுவின் நாடகங்களைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. அப்படி ஒரு நாடகம் பார்க்கச் சென்றிருந்தபோதுதான் டைரக்டர் சசியைச் சந்திக்கும் சந்தர்ப்பம் அமைந்தது.

அப்போ "உங்ககிட்டே கொஞ்சம் பேசணும்" என்று சொல்லி என்னுடைய டெலிபோன் நம்பரை வாங்கிக் கொண்டார் சசி. சுமார் ஒரு மாதம் கழித்து நாங்கள் சந்தித்துப் பேசினோம். 'டிஷ்யூம்' படத்தின் கதையைச் சொன்னார். படத்தின் ஹீரோ ஸ்டண்ட் மாஸ்டர் என்பதால் 'பல்டி அடிப்பது போன்றவற்றை நீங்கள் நன்றாக பிராக்டீஸ் செய்ய வேண்டும்' என்று கூறினார்




> **ஒற்றைக் காலில் நின்று கண்களை மூடியதும் அதலபாதாளத்தில் விழுவது போன்ற உணர்வு!**

படத்தின் ஸ்டண்ட் இயக்குநர் சக்தி வர்மா. அதன்படி நானும் ஜிம்னாஸ்டிக் பயிற்சி வகுப்புக்குப் போக ஆரம்பித்தேன். ஒருமாதம் எடுத்துக் கொண்ட பயிற்சி, 'டிஷ்யூம்' படத்தில் எனக்கு மிகவும் உதவிகரமாக இருந்தது. ஒரு படத்தின் ஹீரோ, படத்தில் சில ஸ்டண்ட் காட்சிகளில் நடிப்பதற்கும், படத்தின் கதாநாயகனே ஒரு சினிமா ஸ்டண்ட் கலைஞராக இருப்பதற்கும் உள்ள வித்தியாசத்தை எனக்குப் புரிய வைத்தார்.

**ஒ**ரு சில மாத இடைவெளிக்குப் பிறகு, ஏறத்தாழ ஒரே சமயத்தில் 'ஈ', 'டிஷ்யூம்'

இரண்டு படங்களின் ஷூட்டிங்கும் ஆரம்பித்தன. இரண்டு படங்களிலும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத இரண்டு மாறுபட்ட கேரக்டர்கள். மாறி மாறி இரண்டு படங்களின் படப்பிடிப்பும் நடந்தன. ஒன்றுக்கொன்று அட்ஜெஸ்ட் செய்துகொண்டு நடிப்பது எனக்குக் கஷ்டமாக இல்லை. காரணம், நான் இரண்டு கேரக்டர்களையுமே நன்றாக உள்வாங்கிக் கொண்டு விட்டேன். இரண்டுக்கும் என்ன வித்தியாசம் என்பதையும் புரிந்து வைத்துக் கொண்டிருந்ததால், இரண்டு ஷூட்டிங்குகளிலும் தூள் கிளப்பினேன்.

**"ஐயோ, நெருப்பு! நெருப்பு!" என்று பயந்து அலறினேன். உள்ளே அனல் தகிக்க, தவித்துப் போய்விட்டேன்!**

காருக்குள்ளே பின் சீட்டில் உட்கார்ந்திருந்த தீயணைப்பு வீரர் ஒருவர் நெருப்பை அணைக்க, மேற்கொண்டு சேதம் ஏதுமின்றி அந்தக் காட்சி எடுத்து முடிக்கப்பட்டது.

சென்னை நகரில் பெரும் மழை காரணமாக பல பகுதிகளில் வெள்ளம் வந்தது. அடாது மழை பெய்த போதும், விடாமல் டிஷ்யூம் படப்பிடிப்பு நடந்துகொண்டிருந்தது. அந்தப் படத்தின் கிளைமாக்ஸ் படம் பிடிக்கப்பட்ட சமயம், ஷூட்டிங் ஸ்பாட்டில் வெள்ளம் காரணமாக தரையில் இரண்டு அடிவரை



'டிஷ்யூ'மில் நான் காரை ஓட்டிக்கொண்டு சென்று, ஒரு கண்டெய்னர் லாரி மீது மோதும் தீ விபத்துக் காட்சி ஒன்றைப் பார்த்திருப்பீர்கள். அது மிகவும் த்ரிலிங்கான அனுபவம் மட்டுமல்ல... என் தலைமுடி பொசுங்கிப் போகுமளவுக்கு அபாயமானதாகவும் இருந்தது. காருக்குள்ளே உட்கார்ந்து நான் காரை ஓட்டிச் செல்ல, காரின் வெளியில் நாலாபுறமும் தீ ஜுவாலைகள்! உள்ளே தகிப்பு! அப்போது சற்றும் எதிர்பாராத விதமாகக் காருக்குள்ளும் தீ பரவத் தொடங்க, நான் "ஐயோ! நெருப்பு! நெருப்பு!" என்று பயந்து அலறினேன். அந்த திகில் நிமிடங்களை இப்போது நினைத்தாலும் நெஞ்சம் உறைகிறது. நல்ல காலம், தண்ணீர் தேங்கி இருந்தது. என்னை நாற்பது அடி உயரத்தில் தலைகீழாகக் கட்டித் தொங்க விட்டிருந்தார்கள். கீழே தேங்கியிருந்த தண்ணீரில் என் பிம்பத்தை என்னால் பார்க்க முடிந்தது. அந்த நேரத்தில் வெடிச் சப்தம் கேட்பதாகக் காட்சி. டைரக்டர் சசி, "ஜீவா! வெடிச் சப்தம் தொல்லையா இருந்துச்சின்னா, காதுல கொஞ்சம் பஞ்சு வெச்சுக்கோங்க!" என்றதும், பட்டென்று நான் ஒரு ஜோக் அடித்தேன். அந்த ஜோக்கை மிகவும் ரசித்த சசி, இன்றைக்கும் என்னைப் பார்க்கிறபோது, "தலைகீழா கட்டித் தொங்க விட்டிருக்கும்போதும் உங்களுக்கு எப்படி சூப்பர் ஜோக் வருது?" என்று கேட்பார்.

**(அடுத்த இதழில் முடிக்கிறேன்)**



ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் துணை

5/448, வாட்டர் போர்டு காலனி,
அழகாபுரம், சேலம் - 16

ஆன்மீக வழியில் அனைத்துப்
பிரச்னைகளுக்கும் தீர்வு காண

# 'அருள் வாக்கு'

கேட்டுப் பயன் பெறுங்கள்

**சமயபுரம், பண்ணாரி, கருமாரி அம்மன்**

ஆகியோரின் அருள் பெற்று

**திருமதி. ஜெயந்தி தனஞ்ஜெயன்**

அருள் வாக்குச் சொல்வார்கள்.

---

விபரங்களுக்குத் தொடர்பு கொள்ளவும்

**போன் : 0427 - 2448036 செல் : 98942 - 51883, 98941 - 42883**

---




# யாத்திரை/சுற்றுலா

தனி 3 - Tier கோரேஜ் மற்றும் ரிசர்வேஷன் மூலம் முதல் தரமான சைவ உணவு. தங்கும் வசதிகளுடன் கீழ்கண்ட பயணங்கள் புறப்பட உள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 16. 04. 07 | - | 20 நாட்கள் | காசி யாத்திரை ( தனி கோரேஜ் ) |
| 18. 04. 07 | - | 12 நாட்கள் | டார்ஜிலிங் பயணம் |
| 30. 04. 07 | - | 13 நாட்கள் | நேபாளம் - முக்திநாத் யாத்திரை |
| 13. 05. 07 | - | 8 நாட்கள் | ஆந்திரா பயணம் |
| 26. 05. 07 | - | 6 நாட்கள் | கேரளா பயணம் |
| 09. 05. 07 | - | 20 நாட்கள் | காசியாத்திரை ( தனி கோரேஜ் ) |
| 24. 09. 07 | - | 13 நாட்கள் | குலு.மணாலி பயணம் |
| 28. 09. 07 | - | 16 நாட்கள் | பஞ்சதுவாரகை யாத்திரை |

மற்றும் அந்தமான் பயணம். -:விபரங்களுக்கு:-

®

**ஸ்ரீஸ்வர்ணாம்பிகை ஆல் இந்தியா டிராவல் கம்பெனி**

( Recognized by the Ministry of Tourism, Government of India )

ஸ்ரீதர் காம்ப்ளக்ஸ், 124/1, டவுன் இரயில்வே ஸ்டேஷன் ரோடு, சேலம் - 636 001

போன்: **0427 - 2450622, 2450633, 2450644, 4051991, வீடு: 2416387**

Murali/slm/9362110604

# இந்தியா முழுவதும்
# ஒரே நாளில் தேர்தல்!



**உலகக் கோப்பை கிரிக்கெட்டுக்கு அடுத்து இந்தியாவே வியந்து பார்க்கும் விஷயம் உ.பி. தேர்தல். முதலமைச்சர் நாற்காலியில் அமரப் போவது யாரென்று பரபரப்பாக எதிர்பார்க்கப்படும் வேளையில், இந்திய தலைமைத் தேர்தல் ஆணையர் என்.கோபால்ஸ்வாமியை நாம் சந்தித்துப் பேசினோம்.**

*உ.பி. சட்டசபைத் தேர்தலை ஒட்டி பல உயரதிகாரிகள் அதிரடியாக மாற்றம் செய்யப்பட்டுள்ளதன் பின்னணி என்ன?*

''முதலில் இதை 'அதிரடி' நடவடிக்கை என்றே கூற முடியாது. இது ஓர் 'அவசிய' நடவடிக்கை. Free and fair poll, உண்மையான, ஒழுக்கமான முறையில் தேர்தலை நடத்த வேண்டும் என்பது மட்டும்தான் எங்களது இலட்சியம். அதற்காக, பல நடவடிக்கைகளை எடுத்து வருகிறோம். அதில் ஒன்றுதான் சில அதிகாரிகளை மாற்றம் செய்ய மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளும்.''

*முலாயம்சிங்கால் உ.பி.யில் சட்டம் ஒழுங்கு முற்றிலுமாகச் சீர்குலைந்து விட்டது என்று எதிர்கட்சிகள் கூக்குரலிட்டதால்தான் இப்படி அதிகாரிகள் மாற்றப்பட்டுள்ளனரா?*

''தேர்தல் ஆணையம் ஒரு குழு அமைத்து உ.பி.யைத் தீவிரமாகக் கண்காணித்து, பலவிதமான என்கொய்ரிகளை நடத்திக் கொண்டுதான்

இருக்கிறது. அதனால், எதிர்கட்சிகளின் பரிந்துரையின் பேரில் மட்டுமே அதிகாரிகள் மாற்றப்படவில்லை."

**உ.பி.யில் ஏப்ரல், மே மாதங்களில் வெயிலின் கடுமை மிக அதிகமாக இருக்கும். இந்நேரத்தில் மக்கள் வாக்குச்சாவடிகளுக்கு வந்து ஓட்டுப் போடத் தயங்குவார்கள். இதனால் வாக்கு சதவிகிதம் குறையக் கூடும் என்று கூறப்படுகிறதே...**

"ஒரு மாநிலத்தில் நிலவும் தட்பவெப்ப நிலையை மட்டுமே கணக்கில் வைத்துக் கொண்டு தேர்தல் நடத்த முடியாது. மாணவர்களின் தேர்வு தேதிகள், விடுமுறை நாட்கள் எனப் பல காரணங்களைக் கணக்கிலெடுத்துக் கொண்டுதான் தேர்தலுக்கான தேதிகளை முடிவு செய்கிறோம். கொட்டும் மழையோ, பனியோ, கொளுத்தும் வெயிலோ இதுவரை மக்களின் வாக்குப் போடும் சதவிகிதத்தை எந்த மாநிலத்திலும் பாதித்தது கிடையாது."

**மக்களிடம் ஓட்டுரிமையைப் பற்றிய அறிவு வளர்ந்திருக்கிறதா?**

"நிச்சயமாக. தாங்கள் செலுத்தும் வாக்கின் முக்கியத்துவத்தை மக்கள் நன்றாகவே புரிந்து வைத்திருக்கின்றனர். பெரும் நகரங்களில், நன்கு படித்தவர்கள் நிரம்பிய இடங்களில் வாக்களிப்போர் சதவிகிதம், கிராமப்புறங்களில் விழும் வாக்கு எண்ணிக்கையைவிட குறைவானதாகவே இருக்கிறது. ஓட்டளிப்பது தங்களது உரிமை, கடமை என்பதை குக்கிராமங்களில் வாழும் மக்கள்கூட தெரிந்துகொண்டுள்ளனர்."

**நாட்டின் பல இடங்களில் அடையாள அட்டை வழங்கும் பணி முடியவில்லையே?**

"ஆமாம். ஐந்து வருடங்களுக்கு ஒருமுறை மட்டுமே தேர்தல் வருவதால், அடையாள அட்டை வாங்கிக்கொள்வதில் பொது மக்கள் அவ்வளவு ஆர்வம் காட்டுவதில்லை. தேர்தல் நெருங்கும் சமயத்தில்தான் அடையாள வாக்குச் சீட்டு வேண்டும் என்கிற ஒரு பரபரப்பு பரவலாக மக்களிடம் காணப்படுகிறது. வோட்டுப் போடுவது என்பது நம் நாட்டில் மக்களின் கடமை தானே தவிர, கட்டாயமில்லை.



## "கள்ள வோட்டுகளைத் தடுக்க போட்டோ எலக்டோரல் ரோல் என்ற அடையாள வாக்குச் சீட்டு 2009-ஆம் ஆண்டுக்குள் அனைத்து மாநிலங்களிலும் வழங்கப்பட்டு விடும்"

மேலை நாடுகளில், கிட்டத்தட்ட 28 நாடுகளில் வோட்டளிப்பது என்பது கட்டாயமாக்கப்பட்டுள்ளது. இதில் 5, 6 நாடுகளில் வோட்டளிக்கவில்லை என்றால், அதற்குரிய தண்டனையும் வழங்கப்படும். நம் நாட்டில் அப்படி எதுவும் இல்லையே!!"

**தேர்தலில் கள்ள வோட்டுப் போடுவதை ஒழிக்கவே முடியாதா?**

"முற்றிலுமாகக் குறையவில்லை. ஆனால், கணிசமான அளவு குறைந்திருக்கிறது. போட்டோ எலக்டோரல் ரோல் என்ற அடையாள வாக்குச்சீட்டு 2009-ஆம் ஆண்டுக்குள் அனைத்து மாநிலங்களிலும் வழங்கப்பட்டு விடும். அதில் அவரவர்களுக்கென ஒரு தனிப்பட்ட எண் இருக்கும். இதனால், எவ்வளவு வருட காலங்கள் ஆனாலும் சரி, எந்தெந்த ஊர்களுக்கு அவர்கள் மாற்றலாகிப் போனாலும் சரி அந்த எண் மாறாது. கள்ள வோட்டுகள் விழாமல் இருக்க இவை நிச்சயம் உதவும்."

**இந்தியத் தேர்தல் எப்படி இருக்க வேண்டும் என நினைக்கிறீர்கள்?**

"இந்தியாவில் உள்ள அனைத்து மாநிலங்களுக்கும் ஒரே நாளில் தேர்தல் நடத்தப்பட வேண்டும். வாக்குச் சாவடிகளில் பாதுகாப்புக்கென காவலாளிகள் இருக்கக் கூடாது. அமெரிக்காவிலும் ஆஸ்திரேலியாவிலும் அப்படித்தான் தேர்தல் நடக்கிறது. தேர்தல் முடிந்தவுடன் வாக்குச் சாவடியிலேயே வாக்குச் சீட்டுகள் எண்ணப்பட்டு, நான்கு, ஐந்து மணி நேரங்களில் முடிவுகளும் அறிவிக்கப்பட்டு விடுகின்றன. இந்தியாவிலும் அப்படி ஒரு காலம் நிச்சயம் வரும்."

**- நளினி சம்பத்குமார்**



ஏன், என்ன என்றெல்லாம் எதுவும் கேட்காமல் அமைதியாய் ஒரு மகிழ்ச்சி நெஞ்சில் வந்து அமர்ந்தது. என்ன சந்தோஷம் இது? எதற்கு? யோசித்தால் பிடிபட வில்லை. தோட்டத்தில் அதிகாலையின் இனிய குளிரில் மல்லிகைச் செடியில் பூப் பறித்துக் கொண்டிருந்தவள் முன், குபீ ரென்று செடியெங்கும் வெள்ளை வெள்ளை யாய்ப் பூத்துக் குலுங்கும் சந்தோஷம்!

மனம் முழுக்கப் பூரிப்பு நிறைந்து தளும்புகிறது.

மனமெங்கும் திசையெங்கும். இயற்கை யின் சன்னதியெங்கும். நிமிர்ந்து பார்த்தாள். வானத்தில் வைகறையின் கன்னம் களிப்பில் சிவந்திருந்தது. தோட்டத்தின் உயரமான மர உச்சிகளில் செம்பட்டை மின்னுவதுபோல் விடியற்காலையின் இளஞ்சிவப்பொளி அங்கங்கே படர்ந்திருந்தது. மரக்கிளைகள் இரண்டு ஒன்றோடொன்று இணைந்து வளைந்திருந்தன, கூடிய புருவங்கள்போல்.

பவழ மல்லியின் தேவமணமும் மாங்குயி லின் குரலோசையும் அரச இலைகளின் சாமரக் குளிர்ச்சியும் மகிழ்ச்சியின் மகுடத்துக்குப் போட்டியிட்டன. "ஏ பவானி, தோட்டத்தில் பூப்பறிக்கிறேன்

சிறப்புச் சிறுகதை

# பதில் சொல் பவானி!

ஆர்.சூடாமணி

பேர்வழின்னு நின்னபடியே தூங்கிப் போயிட்டியா? வாடி உள்ளே!'' என்ற அபசுரக் குரல்கூடத் துளைக்க முடியாத மகிழ்ச்சியின் பூர்ண லயம்.

உள்ளே சென்றாள்.

"நீயும் தோட்டத்துக்கு வந்து பாரேன் மனோகர்! எத்தனை சந்தோஷமாயிருக்கு தெரியுமா?''

"காபி போடு.''

காற்றை நீக்கிய பலூனாகியிருக்க வேண்டும் அவள். ஆகவில்லை. உடல் உப்புகிறது மகிழ்ச்சியால்.

வானத்தில் அரும்பிய சூரியோதயம் சிறிது சிறிதாய் பூமியின்மேல் பகலாய் மலரலாயிற்று.

பின்னால் மனோகர்.

"என்ன, தோட்டத்துக்கு ஓடி ஓடி வரே? யாராவது வந்திருக்கானா என்ன?'' சுற்றுமுற்றும் பார்த்தான். வெளி 'கேட்'டைத் திறந்துகொண்டு வாசலுக்குப் போய் இப் படியும் அப்படியும் தெருவை நோட்டம் விட் டான். யாரும் இல்லை, வெகு தூரம் வரை.

திரும்பியவனை பவானி கண் அசைக்காமல் பார்த்தாள். அவன் அந்தப் பார்வையைத் தவிர்த்தான்.

''ஒண்ணுமில்லே... இவ்வளவு காலையில் யார் வரப்போறா, இல்லையா...?''

"போய் காப்பி போட றேன்.''

ஒன்பது மணியள வில் டிபன், சாப்பாடு எல்லாம் செய்து முடித் தாயிற்று. அவனை அலுவலகம் அனுப் பினாள். தலை சீவிக் கொண்டு குளியலை முடித்து நெற்றியில் சிவப்பு ஸ்டிக்கர் வில் லையை வைத்து அழுத்திக் கொண்டாள். ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள். சூரியோதயத்தைக் காணோம். எனினும், பொன் நிறச் சேலையும் இளஞ் சிவப்பில் ரவிக்கையுமாய் நிலைக் கண்ணாடிக்குள் இன்னொரு சூரியோதயமாய் நின்றாள். மனசில் மீண்டும் மீண்டும் அந்தக் கவிதை வரி : 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் எங்கள் இறைவா...'

ஃப்ரிஜ்ஜில் கறிகாய்கள் தீர்ந்து கொண் டிருந்தன. காய், கனி சூப்பர் மார்க்கெட் டுக்குள் நுழைந்தாள்.

கடைப் பையன் பரிச்சயமானவன். "வாங்கம்மா! ஊட்டியிலேர்ந்து காயெல் லாம் ஃப்ரெஷ்ஷா வந்திருக்கு.''

"ரொம்ப சந்தோஷம்ப்பா! நீயே சிபாரிசு பண்ணு. எது எல்லாத்தைவிட நல்லா யிருக்கு?''

"யார், பவானியா!''

நடுத்தர உயரமும் சற்றுப் பூசிய உடல் வாகுமாய் எதிரே அவள் சிநேகிதி கோமதி.

"ஹலோ, கோமு! எங்கே இந்தப் பக்கம்? நீ இருக்கிறது சிந்தாதிரிப்பேட்டை இல்லையோ?''

"ஏன், அங்கிருந்து புரசைவாக்கம் வரக் கூடாதா என்ன? உன் வீடு இங்கே எங்கேயோ தான் இருக்கு, இல்லே?''

''அடுத்த தெரு. இப்போ காய்கறி வாங் கினதும் நேரே என்கூட என் வீட்டுக்கு வரே.''

"இந்தப்பா பையா, மொத்தத்துக்கும் ஒண்ணா பில் போட்டு என்கிட்ட கொடு.''

''என்ன இது பவானி!''

''என்ன இதுன்னா இதுதான். எனக்கு ஆசையாயிருக்கு. வாங்

**அவன் அந்தக் களங்கமின்மையைப் பார்க்கவில்லை. அவர்கள் பார்வையைத்தான் பார்த்தான். ஏதோ கேள்விப்பட்டிருப்பான் போல் தோன்றியது. முகம் இறுகி இருந்தது.**

''போலீஸ்னு சொல்றீங்க... கொஞ்சம் கூட தொப்பை இல்லியே... எப்படி?''

''சஸ்பெண்டுல இருக்கேன்!''

- அம்பை தேவா



கிக்கோ; சொல்றேன்.''

கோமதி அவளைக் கூர்ந்து பார்த்தாள். ''இன்னிக்கு உன் முகமே அலாதி பொலிவோடு இருக்கு. என்ன விஷயம் பவானி?''

''எனக்கே தெரியலே கோமு. காலையி லிருந்தே மனசுக்குள் ஏதோ இனந்தெரியாத ஒரு குதூகலம்.''

''இனந்தெரியாத குதூகலமா? அப் படின்னா புதுசா ஏதோ ஒரு சந்தோஷ செய்தி வரப்போகுதுன்னு அர்த்தம். அல்லது சந்தோஷமாய் ஏதோ ஒண்ணு நடக்கப் போகுது.''

''இந்த வைகாசி மூணாம் தேதிக்கு அம்பது முடியறது எனக்கு. இனி புதுசா என்ன சந்தோஷம் வரப் போறதாம்!''

''அம்பதா! என்ன சொல்றே? உனக்கா அம்பது வயசு?''

''இல்லே, அஞ்சு வயசு!''

**வீ**ட்டின் வரவேற்பறையில் இருவரும் ஆப்பிள் துண்டுகளைச் சுவைத்து காபி அருந்திக் கொண்டிருக்கையில் தோழி கேட்டாள். ''பெண்ணும் பையனும் நல்லாயிருக்காங்களா பவானி?''

''ம், ஒண்ணும் குறையில்லை.''

''இப்போ எங்கே இருக்காங்க?''

''ராதா ஸ்விட்ஸர்லாண்டில் இருக்கா. மாப்பிள்ளைக்கு அங்கே ஒரு ஃபார்மஸி நிர்வாகத்தில் வேலை.''

''ஒரு வேளை அவங்க வரப் போறாங் களோ, என்னவோ?''

''அப்படியா சொல்றே?'' பவானியின் கண்கள் பிரகாசமடைந்தன. ''உன் வார்த்தை பலிக்கட்டும்.''

விரும்பியதை அடைவது மகிழ்ச்சி. அதேபோல், வெறுப்பது விலகிப்போவதும் மகிழ்ச்சிதான்...

பேசிக்கொண்டிருந்தபோது தொலை பேசி அழைத்தது. பவானி எழுந்து போய் ரிசீவரை எடுத்துக் காதில் வைத்தவாறே ''கொஞ்சம் இரு, பேசிட்டு வந்துடறேன்'' என்றபின் 'ஹலோ' என்றாள்.

''பவானி? மனோகர் பேசறேன்.''

''தெரியறது, சொல்லு என்ன விஷயம்?''

''தனியாத்தானே இருக்கே?''

''பின்னே?''

''யார்கிட்டயோ 'இரு, பேசிட்டு வந்துடறேன்'னு சொன்னாப்போல காதில் விழுந்தது...''

''ஆமாம், ஒரு விசிட்டர்.''

''யாரு? யாரு?''

''கொஞ்சம் இரு.'' ரிசீவரைத் தோழி யிடம் நீட்டினாள். ''அவருக்கு ஹலோ சொல்றியா?''

''ஹலோ, மிஸ்டர் மனோகர். நான்தான் பவானியோட சிநேகிதி கோமதி வந்திருக்கேன்.''

''சௌக்யமா? நீங்க வந்தது அவளுக்குப் பொழுதுபோக்காயிருக்கும். வச்சுடறேன், வேலையிருக்கு.''

ரிசீவரை வைத்து விட்டு அவள் திரும்பிய போது பவானி நாற்காலியில் சோர்வுடன் சாய்ந்திருந்தாள்.

''என்ன பவானி? ஏதாவது கவலையாச் சொன்னாரா?''

''வேறென்ன! நான் தனியாத்தான் இருக்கேனான்னு வேவு பார்க்கற கவலைதான். தாலி கட்டின புருஷனில்

''என்ன பெரிய கவலை! நான் தனியாகத்தான் இருக்கேனான்னு வேவு பார்க்கிற கவலைதான். தாலி கட்டின புருஷனில்லையா?''

லையா?"

"ஓ... அதுவா விஷயம்!"

பவானியின் கண்களில் நீர் திரண்டது. "இன்னும் ரெண்டு மாசத்தில் எனக்கு அம்பது ஆகப்போறது. இப்போ கூடவா?"

கோமதி தோழியைப் பணிவுடன் அணைத்துக்கொண்டு ஆசுவாசப்படுத்தினாள். அவள் சென்ற பிறகும் பவானியின் மனத்தில் அதே நினைவுத் தடம்.

இளமையில் எத்தனையோ புண்பட்டாயிற்று. "ஜன்னல்கிட்ட என்ன நிக்கறே?" "வாசல்ல என்ன பார்க்கறே?" "அமர்க்களமா உடுத்திண்டிருக்கியே! யாராலும் வரானான்ன? எனக்குத் தெரிஞ்சவானா?"

'சீ' என்று ஆகிவிட்டது அவளுக்கு.

சந்தேக வித்து அவன் மனத்தில் விழுந்தது திருமண நாளன்றே.

மணமக்களுக்குச் சற்றே தொலைவில் நின்று ராஜசேகர் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தான். குறிப்பாக, அவளையே... சிறு பருவத்திலிருந்தே ஒன்றாய்ப் பழகி விளையாடியவர்கள். இளமையில் பரஸ்பர ஈர்ப்பினால் திருமண பந்தத்தில் இணைய விரும்பியவர்கள். ஜாதிப் பிரச்னையால் அது இயலாமல் போயிற்று. கடைசியில் இந்தத் திருமணம்.

அவன் அசையாமல் நின்றிருந்தான். தன் நெடிய உயரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தான். கண்களில் களங்கமில்லை. கனிவு இருந்தது; துயரம் இருந்தது. அவளுக்கும்தான்.

மனோகர் அந்தக் களங்கமின்மையைப் பார்க்கவில்லை. அவர்கள் பார்வையைத் தான் பார்த்தான். ஏதோ கேள்விப்பட்டிருப்பான் போலத் தோன்றியது. முகம் இறுகியிருந்தது.

கொண்டு வந்திருந்த வெள்ளிப் பேழையைப் பரிசளித்துவிட்டு ராஜசேகர் போய்விட்டான்.

இன்றளவும் பவானி அவனை மறக்கவில்லை.

இப்போது அவளறியாமலே உள்ளே ஒரு குரூர எண்ணம், விரும்பாதது விலகிப் போவதுதான் மகிழ்ச்சி என்றால்.... மனோகர் விலகிப் போனால் அதுதான் அவளுக்கு வரவிருக்கும் மகிழ்ச்சியான செய்தியா? சிறு பிளவு, நீண்ட பிரிவு...

**சந்தேகம் அவன் சுபாவம். எத்தனையோ கணவன்மாரிடம் உள்ள குறைபாடு! அதற்காக ஏன் இப்படிக் கடுமையாக நினைக்க வேண்டும்?**

தவறு. இப்படியெல்லாம் நினைக்கலாகாது... சந்தேகம் அவன் சுபாவம். எத்தனையோ கணவன்மாரிடம் உள்ள குறைபாடு! அதற்காக ஏன் இப்படிக் கடுமையாக நினைக்க வேண்டும்?

எனினும் மனம் நிலைப்படவில்லை. காதில் அந்தச் சொற்கள். 'தனியாத்தானே இருக்கே?'

கொஞ்சம் காலாற வெளியே போய்வரலாமா? அவனுக்குக் கொஞ்சம் ஷர்ட் துணி வாங்க வேண்டுமே... கிளம்பினாள்.

திரும்பி வந்தபோது அவர்களுடைய மாருதி சுஸுகி வாசலில் நின்றிருந்தது. அவனும்தான். மணி ஐந்துகூட ஆகவில்லையே. இன்று என்ன இவ்வளவு சீக்கிரமாய்?

"என்ன பவானி, எங்கே போயிருந்தே?" என்றான்.

அவள், அவனைத் தீவிரமாய்ப் பார்த்தாள்.

"பதில் சொல்லேன் பவானி. சாதாரணமாய்

"தேர்தலைப் புறக்கணிப்போம்னு சொல்றீங்களே... ஏன்?"

"கள்ள ஓட்டுக்கு ரொம்ப செலவாகுது!"

- அம்பை தேவா



"பிறந்த நாள் விழாவுல தலைவர் கடுப்பா இருக்காரே... ஏன்?"

"ஏற்கெனவே தேர்தல்ல தோற்றுப் போய் இருக்கற அவர்கிட்ட 'இன்று போல் என்றும் வாழ்க'ன்னு வாழ்த்தியிருக்காங்க!"

- அம்பை தேவா



நான் ஆபீசுலேர்ந்து வர்றபோது நீ வீட்டி விருப்பியே! இன்னிக்கு என்ன, உன் ஃப்ரெண்ட் கோமதியோடு எங்கேயானும் போயிருந்தியா? இத்தனை நேரமா இருந்தாங்க?"

அவள் பார்வைத் தீவிரத்தில் தீ கூடியது. "நான் போய் காபி கலக்கறேன்" ஹால் கதவை மூடிக்கொண்டு உள்ளே போனாள்.

அவனுக்கு ஆத்திரம் மூண்டது.

"உன்கிட்ட ஒரு கேள்வி கேட்டேன்னு நினைக்கறேன்" என்றான் குமுறியபடி.

"நானும் உனக்குப் பதில் சொல் லிட்டேன்னு நினைக்கிறேன்."

அவன் அதிர்ந்து போனான்.

வாசற்கதவு மணி ஒலித்தது. அவன் அதிர்ச்சியில் நின்றவா றிருக்க, அவள் சென்று கதவைத் திறந்தாள்.

எதிரே அவன்.

அவள் உடம்பு சிலிர்த்துவிட்டது. கண நேரம் உலகமே நின்று போயிற்று.

அலை அலையாய் உணர்விலிருந்து பொங் கிய வெள்ளம். அவனில் இலயித்த கண்கள். அவ னுக்கும் அப்படியே. அவளைப் பார்த்துக் கொண்டிருந்த அவன் கண்கள் கனிந்தன, கசிந் தன.

"எப்படியிருக்கே பவானி?" குரலா, காற்றா?

அவளுக்/குச் சட்டென்று பேச்சு எழவில்லை. உதடுகள் துடித்தன.

"பவானி... என்னைத் தெரியுதில் லையா?"

"என்ன கேள்வி ராஜ்?" அவனை மறக்க முடியுமா? அவன்மீது காலம் நரை, சுருக்கம் இன்னபிறவென்றெல்லாம் வயதை எழுதியிருந்தது உண்மைதான். ஆனால் அந்த உயரம், உச்சியில் செம்பட்டை சாய விடும் அடர்ந்த முடி, கூடிய புருவங்கள்... அவை மனசில் கல்வெட்டாய்ப் பொறித்து வைத்த வடிவம்.

"எவ்வளவு காலமாச்சு, நாம சந்திச்சு!" என்று உயிர்த்தான்.

"துபாயில் இரும்பு வியாபாரம் பண்றேன். இப்போ இங்கே தம்பி பையன் கல்யாணத்துக்காக வந்தேன். இத்தனை வருஷம் கழிச்சு சென்னைக்கு வரவே... உன்னைப் பார்க்கணும்னு..."

அவள் பேச முடியாமல் புன்னகை ததும்பப் பார்த்துக்கொண்டு நின்றாள். அவனும் புன்முறுவலித்தான். பேசவில்லை. நான்கு விழிகளும் ஒரு தனியுலகில் சந்தித்திருந்தன.

பூப்பூவாய் அவளுள் சந்தோஷம் மலர்ந்தது. மகிழ்ச்சி வெள்ளமாய்ப் பெருகி அவளை மூழ்கடித்தது. இன்று வர இருந்த மகிழ்ச்சியான தகவல் இதோ இவன் வருகைதான் என்று புரிந்தது.

"உன்னவருக்கு இஷ்டமில்லைன்னா நான் போயிடறேன் பவானி" அவளுக்குப் பின்னால் பார்த்துக்கொண்டே அவன் கூறினான்.

பூப்பூவாய் அவளுள் சந்தோஷம் மலர்ந்தது. மகிழ்ச்சி வெள்ளமாய்ப் பெருகி அவளை மூழ்கடித்தது. இன்று வர இருந்த மகிழ்ச்சியான தகவல் இதோ இவன் வருகைதான் என்று புரிந்தது.

கணவனின் கடுமை யான பார்வை பின்னாலிருந்து துளைப் பது உணர்வாகியது.

பொட்டில் அறைந் ததுபோல், வயதின் மற்றுமொரு கோணம். ஐம்பது ஆகப் போகி றது எனக்கு. இன்னு மென்ன பயம்?

அவள் புன்னகை யுடன் சொன்னாள்.

"வாசல்லயே நிக்க றியே ராஜ்! உள்ளே வா, உக்கார்ந்து பேசலாம். அவருக்கும் உன்னை அறிமுகப்படுத்தறேன்." ●

## முதலில் மனிதனை மிருகமாக இல்லாமல் மனிதனாக ஆக்க வேண்டும். அப்புறம் அவனை தெய்வமாகவே உயர்த்திவிட வேண்டும்.

ஆசை வருவதனால் கோபம் வருகிறது. கோபம் வருவதனால் பாபங்களைச் செய்கிறோம். அதனால் ஜன்மம் உண்டாகிறது. எல்லாம் ஒன்று என்ற ஞானம் நமக்கு வந்துவிட்டால் வேறு பொருள் இல்லாததனாலே ஆசை இல்லை; கோபம் இல்லை; பாபம் இல்லை; காரியம் இல்லை; ஜனனம் இல்லை; துன்பமும் இல்லை. இந்த ஞானத்தை எப்படிப் பெறுவது? நம்மைப் பெற்ற அம்மா உடம்புக்குப் பால் கொடுப்பாள். அறிவுக்கு ஞானப்பால் கொடுப்பவள் அம்பாள்தான். ஞான ஸ்வரூபமே அவள்தான். அவளுடைய சரணாரவிந்தத்தைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டு அவளுடைய ஸ்வரூபத்தோடு நம்மை நாம் கரைத்தாலே ஞானம் வரும்; மனிதன் அப்போது தெய்வமாவான்.

# மனிதனும் தெய்வமும்...



முதலில் மனிதனை மிருகமாக இல்லாமல் மனிதனாக ஆக்க வேண்டும். அப்புறம் அவனை தெய்வமாகவே உயர்த்திவிட வேண்டும். இந்தக் குறிக்கோளுடன்தான் சகல மதங்களும் உண்டாகியிருக்கின்றன. சித்தாந்தம், தத்துவங்களில் அவற்றுக்குள் எத்தனை பேதமிருந்தாலும், இப்போதிருக்கிற மாதிரி மநுஷ்யனை ஒரே காமக் குரோதாதிகளுடன் இருக்க விடக் கூடாது; இவனை நல்லவனாக ஆக்கி அன்பு, அடக்கம், சாந்தம், தியாகம் முதலிய குணங்கள் உள்ளவனாகப் பண்ண வேண்டும் என்பதில் எல்லா மதங்களும் ஒரே குரலில்தான் பேசுகின்றன.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

## அருள்வாக்கு

13

# ஐ.பி.எம். கடுப்பும் பில் கேட்ஸின் வனப்பும்...

ஐ.பி.எம். விற்பனை பாதிக்கப்பட்டும், அதன் கூட்டாளியான மைக்ரோசாஃப்ட் மட்டும் எனர்ஜி குறையாமல் இருந்ததற்குக் காரணம் என்ன? அவர்கள் தப்பித்துக் கொண்டது எப்படி? நம் ஊர் டி.வி.எஸ். மாதிரி ஒரு பெரிய பைக் நிறுவனம் உங்களிடம் வந்து, 'எங்களுடைய புது மாடல் பைக்குக்கு எஞ்சின் தயாரித்துக் கொடுங்கள்' என்று கேட்கிறார்கள்.

நீங்களும் ராத்திரி பகலாக உட்கார்ந்து, அட்டகாசமான ஓர் எஞ்சினைத் தயாரிக்கிறீர்கள். அதைப் பொருத்தியதும் வண்டி சிறுத்தை மாதிரி சீறிப் பாய்கிறது.

உங்களுடைய எஞ்சின் சகிதம், சந்தையில் அந்தப் புது பைக் அறிமுகமாகிறது. இளைஞர்களும் நடுத்தர வயதுக்காரர்களும் அதை ஆசையாக அள்ளிக் கொள்கிறார்கள். பைக், எஞ்சின் இரண்டுமே சூப்பர் ஹிட்.

இப்போது போட்டி நிறுவனங்கள் என்ன செய்கின்றன? அந்த பைக்கைக் காப்பியடித்து, கிட்டத்தட்ட அதேமாதிரி பெயர், அதே மாதிரி நிறங்கள், அதே மாதிரி இயங்கு திறனுடன் இன்னொரு பைக்கைத் தயாரிக்க முயற்சி செய்கிறார்கள்.

சுலபமாகப் பிரதியெடுத்துவிடலாம். ஆனால், அந்தச் சிறுத்தை எஞ்சின்? அதை

காப்பியடிப்பது ரொம்பக் கஷ்டமாச்சே.

அதனால், இந்தப் போட்டி கம்பெனிகள் உங்களிடம் வருகிறார்கள். 'எங்களுக்கும் சிறுத்தை எஞ்சின் வேண்டும் நிறையப் பணம் கொடுத்து வாங்கிக் கொள்கிறோம்' என்கிறார்கள்.

நியாயப்படி பார்த்தால், இப்போது நீங்கள் என்ன செய்ய வேண்டும்?

'வேறொரு கம்பெனிக்காகச் செய்த எஞ்சினை நான் உங்களுக்கு விற்பது சரியாகாது. ஆகவே, நீங்கள் வேறு இடம் பாருங்கள்' என்று கும்பிடு போட்டு அவர்களை வெளியே அனுப்ப வேண்டும் இல்லையா?

'ம்ஹூம், இல்லை' என்கிறார் பில் கேட்ஸ். 'எஞ்சின் தயாரித்தது நான். அதை யாருக்கு வேண்டுமானாலும் விற்பனை செய்கிற முழு உரிமை எனக்கு உண்டு' என்பது அவருடைய கட்சி.

இங்கே, 'பைக்'குக்குப் பதிலாக, ஐ.பி.எம். பர்சனல் கம்ப்யூட்டர்கள், எஞ்சினுக்குப் பதிலாக, மைக்ரோசாஃப்ட் தயாரித்த ஆபரேட்டிங் சிஸ்டத்தை இட்டு நிரப்பிக் கொள்ளுங்கள். எண்பதுகளின் முற்பகுதியில் இப்படித்தான் மைக்ரோசாஃப்ட் தனது அதிவேக வளர்ச்சியைத் தொடங்கியது.

**ப**ர்சனல் கம்ப்யூட்டர்கள் விஷயத்தில் ஐ.பி.எம்.மின் மிகப்பெரிய சறுக்கல் இது. தங்களுக்காக உருவாக்கப்பட்ட ஆபரேட்டிங் சிஸ்டத்தின் முழு உரிமையும் தங்களுக்குத்தான் சொந்தம், வேறு யாருக்கும் மைக்ரோசாஃப்ட் அதை விற்கக்கூடாது என்று அவர்கள் வலியுறுத்தியிருந்தால், பில் கேட்ஸ் அதனை பிட் நோட்டீஸ்போல் பிரதியெடுத்து விநியோகித்துக் காசு பண்ணியிருக்க முடியாது.

'வருங்காலத்தில் ஐ.பி.எம். பர்சனல் கம்ப்யூட்டர்கள் மிகப் பிரபலமாகப் போகின்றன. அவற்றைப் பலர் காப்பியடிக்கப் போகிறார்கள். இந்த 'காப்பி'யாளர்களுக்கெல்லாம் நிச்சயமாக ஓர் ஓ.எஸ். தேவைப்படும்' என்றெல்லாம் விளக்கமாகக் கணக்குப் போட்டுத்தான் ஐ.பி.எம்.முடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தில் இப்படி ஒரு நுணுக்கமான 'உள்குத்து' வைத்திருந்தார் பில் கேட்ஸ்.

அவர் எதிர்பார்த்து போலவே, பர்சனல் கம்ப்யூட்டர்கள் மிகக் குறுகிய காலகட்டத்துக்குள் சூப்பர் ஹிட் அந்தஸ்தைத் தொட்டுவிட்டன. அதை காப்பியடிக்க முயன்றவர்களுக்கெல்லாம், ஒப்பந்தப்படி மைக்ரோசாஃப்ட் தனது ஆபரேட்டிங் சிஸ்டத்தை விற்பனை செய்ய முடியும்.

ஐ.பி.எம்.மின் கவனக்குறைவு, பில் கேட்ஸுக்குப் பெரிய லாபமாகிவிட்டது. அநேகமாக, அந்தக் காலகட்டத்தில் பர்சனல் கம்ப்யூட்டர் தயாரிப்பில் ஈடுபட்ட அனைத்து நிறுவனங்களும் மைக்ரோசாஃப்டின் வாடிக்கையாளர்களாகிவிட்டன. DOS என்று சுருக்கமாக அழைக்கப்பட்ட அந்த ஆபரேட்டிங் சிஸ்டத்துக்காக செலவழித்ததுபோல பல மடங்கு லாபத்தைச் சம்பாதித்தது மைக்ரோசாஃப்ட்.

தன்னுடைய போட்டியாளர்கள் எல்லோருக்கும் மைக்ரோசாஃப்ட் இப்படி

**ஐ.பி.எம்.மின் கவனக்குறைவு பில் கேட்ஸுக்கு பெரிய லாபமாகிவிட்டது!**

தாராளமாக உதவுவதில் ஐ.பி.எம்.முக்குக் கடுப்புதான். ஆனால், சட்டப்படி அவர்களால் எதுவும் செய்ய முடியவில்லை. பில் கேட்ஸின் வளர்ச்சியைக் கையைக் கட்டிக்கொண்டு வேடிக்கை பார்த்தனர்.

மைக்ரோசாஃப்ட் தொடங்கிப் பல ஆண்டுகளுக்குப் பிறகு, முதன்முறையாக அதன் வங்கிக் கணக்கில் பசுமை தாண்டவமாடியது. பணம் என்றால், நாமெல்லாம் கற்பனையில்கூட நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்குப் பணம் சம்பாதித்துக் கொடுத்தது 'டாஸ்.' அதன் விளைவு...

(தொடரும்)

**முதல்வன்**

**என்.சொக்கன்**

தும்

ம் நயன்தாரா...



'யாரடி நீ மோகினி' - தமிழ் சினிமாவை விட்டு சிம்புவால் தலைதெறிக்க ஓடிய நயன்தாரா இளைத்துத் துரும்பாகி 'யாருக்காவது பல் குத்த உதவுவேனா' என்கிற ரேஞ்சில் மறுபடியும் கோலிவுட்டில் களம் புகுந்து தனுஷுடன் கும்மியடிக்கும் படம். 'சிம்புவை வெறுப்பேற்றத்தான் இப்படி நயன்தாராவை உங்களுக்கு ஜோடியாக்கிட்டீங்களா?' என்றால், பதறி மறுக்கிறார் தனுஷ். இப்படிக் கேட்பதற்கு காரணமில்லாமல் இல்லை. இந்தப் படத்தைத் தயாரிப்பது தனுஷின் சகோதரி விமலகீதா. சொந்தப் படத்தில் நயன்தாராவைப் போட்டிருப்பது சந்தேகத்தைத்தானே ஏற்படுத்தும்?! இதற்கும் தனுஷிடம் பதில் இருக்கிறது: "ஹீரோயின்கள் விஷயத்தில் நான் எப்போதும் தலையிடுவதில்லை. சொந்தப் படமானாலும் இந்த மேட்டரில் நான் தள்ளியே நிற்பேன். என் நிஜ ஹீரோயின் ஐஸ்வர்யாதான்."

சரி சரி, கடலையை விட்டுவிட்டு கதைக்கு வருவோம்...

"திருவிளையாடல் ஆரம்பம் தந்த உற்சாகத்துல உடனடியா களமிறங்கிட்டோம். இந்தப் படத்துக்கு நயன்தாராவைத் தவிர வேற யாருமே சரியாப் பொருந்த மாட்டாங்க. கதை, திரைக்கதை செல்வராகவன் எழுத, அவரோட இணை இயக்குநரா இருந்த மித்ரன் ஆர்.ஜவஹர் டைரக்ட் பண்றார். சென்னையில சமீபத்தில்தான் படப்பிடிப்பை தொடங்கியிருக்கோம். இத்தாலியில பாடல் காட்சிகளை எடுக்கத் திட்டமிட்டிருக்கோம்" என்கிறார் தயாரிப்பாளர் விமலகீதா.

தெலுங்கில் வெங்கடேஷை வைத்து செல்வராகவன் இயக்கும் படம்தான் தமிழில் 'யாரடி நீ மோகினி'யாகிறது. தெலுங்கு முடித்து அடுத்து மறுபடி தமிழ் என்று செல்வராகவன் பிஸியாக இருப்பதால்தான் அவரது உதவியாளர் இப்படத்தை இயக்குகிறார். 'புதுப்பேட்டை' மூலம் தம்பிக்குத் தராத வெற்றியை 'மோகினி' மூலம் தரத் தயாராகிவிட்டார் செல்வராகவன். செல்வராகவனை தனுஷ் பெரியப்பாவாக்கியது பழைய செய்தி... தனுஷ் சித்தப்பாவாகப் போவதுதான் லேட்டஸ்ட்!

- நிரஞ்சனா



# நடக்குமென்பார்;

**மேஷம்:** செல்வாக்கு பெற்ற வாரம். தனம், கல்வி, வாக்கு மேலோங்கும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். திருமண காரியம் கைகூடும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். வியா பாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். சனி/ராகு/கேது/ குரு வழிபாடு செய்து வருதல் நற்பயனை அளிக்கும்.

**ரிஷபம்:** திருமண காரியம் கைகூடும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். கல்வி வளம் மேலோங்கும். பொருளாதாரம் பலப்படும். புதிய தொழில் முயற்சி நற்பயனை அளிக்கும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். ராகு/கேது வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**மிதுனம்:** தெய்வ அனுகூலம் ஏற்படும். பண உதவி கிடைக்கும். கல்வி வளம் மேலோங்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். மறைமுக எதிர்ப்பு/தொல்லை விலகும். திருமண முயற்சி வெற்றி அளிக்கும். செலவுகள் கட்டுக்கடங்கியிருக்கும். கடன் தொல்லை தீரும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கடகம்:** சுபச் செலவு ஏற்படும். வாக்கு வாதத்தைத் தவிர்க்கவும். பண நெருக்கடி குறையும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். வீடு/மனை வழியில் ஆதாயம் ஏற்படும். கல்வியில் அக்கறை செலுத்திப் படிக்கவும். உத்தியோகத்தில் நற்பெயர் உண்டாகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நற்பலன் அளிக்கும்.

**சிம்மம்:** நினைத்தது நடக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். வேலையில் நல்ல முன்னேற்றம் உண்டாகும். நண்பர், உறவினர் அனுகூலம் ஏற்படும். மனமகிழ்ச்சி உண்டாகும். திருமணத் தடை விலகும். ராகு /கேது / சனி / குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**கன்னி:** எண்ணங்கள் யாவும் நிறை

## 1.4.2007 முதல் 7.4.2007 வரை

● என் மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்? நல்ல வேலை எப்போது அமையும்?

– கே.கே.இந்திராணி, காசிபாளையம்

உங்கள் மகளுக்கு 36 வயதுக்குப் பிறகு நல்ல வேலை கிடைக்கும். 2007-ல் திருமணம் நடக்கும்.

● என் மகளுக்கு எப்போது ஆசிரியர் வேலை கிடைக்கும்?

– உஷா, திருச்சி - 17

தங்கள் பெண்ணுக்கு தனியார் துறையில் 2007-ல் வேலை கிடைக்கும். அரசு வேலை கிடைப்பது அரிது.

## பரத்வாஜ் பதில்கள்



# நடக்கும்!



வேறும். புதிய தொழில் முயற்சி பலன் தரும். திருமணம் கைகூடும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் கிட்டும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**துலாம்**: பண வரவு காத்திருக்கிறது. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வீடு/மனை மூலம் ஆதாயம் கிட்டும். திருமண காரியம் கைகூடும். பூர்வீகச் சொத்துகள் பாகப் பிரிவினை ஆகும். குழந்தை பாக்கியம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் உண்டாகும். ராகு / கேது வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம்**: மன நிறைவான வாரம். ஆடம்பரப் பொருள் சேர்க்கை உண்டாகும். கல்வி வளம் மேலோங்கும். தொழில் துவங்க நல்ல நேரம். வராத கடன்கள் வசூலாகும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். திருமணம் கைகூடும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**தனுசு**: மனக் குழப்பம் விலகும். மறைமுக எதிர்ப்புகள் இருக்காது. உடல் ஆரோக்கியம் சீராகும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். தடை விலகித் திருமணம் கைகூடும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். சனி / குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**மகரம்**: வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். குடும்ப உறவில் அனுசரணை தேவை. வேலைப்பளு அதிகரிக்கும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் உண்டு. கல்வியில் அக்கறை செலுத்தவும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

## தஞ்சை பரத்வாஜ்

**கும்பம்**: உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். தடை விலகி திருமணம் கைகூடும். நீண்டதூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். குழந்தைகளால் மனமகிழ்ச்சி உண்டாகும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**மீனம்**: மகிழ்ச்சிகரமான வாரம். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். ஊதிய உயர்வு, பணி உயர்வு ஏற்படும். மனக் கிலேசம் விலகும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். பணவரவு உண்டு. வீடு/மனை வாங்க நல்ல தருணம். குழந்தை பாக்கியம் கிட்டும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

## ஜனங்களின் சாமி

அந்தணக் குலத்தில் பிறந்தவர் சீமான் அரி கிருஷ்ணர். மனைவி அனந்தாயி. ரெண்டு பேரும் ஸ்ரீவைகுண் டம்ங்கிற ஊர்ல செல் வச் செழிப் போட வாழ்ந்துக்கிட்டிருந் தாங்க.

இவங்களுக்கு கிருஷ் ணத்தம்மைன்னு ஒரு பொட்டப்புள்ள. புள் ளைக்கு ஜாதகம் கணிக்க ஒரு சோசி யரைக் கூட்டிக்கிட்டு வந்தார் அரிகிருஷ்ணர். சோசியர் ''இந்தப் புள்ளைக்கு நாக தோசம் இருக்கு. அது நீங் கணும்னா இந்தப் புள் ளையோட சேர்த்து ஒரு ஆண் கீரிப்பிள்ளை யையும் வளர்க் கணும்''னார்.

சரின்னு அந்த பொட்டப்புள்ளை யோட சேர்த்து கீரிப் புள்ளையையும் வளர்த் துக்கிட்டு வந்தாள் அனந்தாயி. ஒரு நாள் அவ கீரை பறிக்கத் தன் வீட்டுக்குப் பின்னால இருக்கிற தோட்டத்



13

# அனந்தாயியின் ஆத்மா!

கழனியூரன்

துக்குப் போனாள்.

அப்ப வீட்டுக்குள்ள ஒரு பெரிய பாம்பு நுழைஞ்சிடுச்சு. தொட்டில்ல கிடந்து உறங்குற புள்ளையைப் பாம்பு கடிச்சிருமோன்னு நினச்ச

கீரிப்பிள்ளை, அந்தப் பாம்பை வழிமறிச்சு, துண்டு துண்டாக் கடிச்சிப் போட்டுட்டு, வீட்டுப் பின்கட்டு வாசலுக்குப் போச்சி.

பின்கட்டு வழியா வந்த அனந்தாயி, வாயெல்லாம் ரெத்த ரெத்தமா நிக்குற கீரிப் பிள்ளையைப் பார்த்து, புள்ளையைத்தான் அது கடிச்சிட்டாக்கும்னு தப்பா நினைச்சு, கையில கிடச்ச விறகுக் கட்டைய எடுத்து அந்தக் கீரிப்பிள்ளையை ஒரே அடியா அடிச்சிக் கொன்னுட்டா.

வீட்டுக்குள்ள போய்ப் பார்த்தா தொட்டில்ல புள்ளை தூங்கிக்கிட்டு இருக்கு. பாம்பு, துண்டு துண்டா நறுக்கப்பட்டுத் தொட்டிலுக்குப் பக்கத்துலயே கிடக்கு. அனந்தாயிக்கு என்ன நடந்திருக்கும்ங்கிறது அப்பத்தான் புத்தியில உரச்சது.

புருஷன் வீட்டுக்குத் திரும்பினதும் நடந்ததையெல்லாம் சொல்லி அழுத அனந்தாயி, "இந்தப் பாவ தோசம் தீர இப்பமே பாவநாசத்துக்குத் தீர்த்தமாடப் போகப் போறேன்"னா. ஆனா அவளுக்குப் பதிலா பாவம் போக்கக் கிளம்பினாரு அரிகிருஷ்ணர். கூட ரெண்டு பேரு.

கால்நடையா நடந்து அகத்திய முனிவர் வாழ்ந்த அகத்தியர் அருவிக்குப் போய், தீர்த்தமாடிட்டுக் காட்டு வழியா நடந்து வந்துக்கிட்டு இருந்தாங்க. பொழுது இருட்டிட்டு. வழியில ஒரு மண்டபத்துல படுத்தாங்க.

நடுச்சாம வேளையில வந்து ஒரு சர்ப்பம் அரிகிருஷ்ணரைத் தீண்டிட்டு. அந்த இடத்துலயே அவர் மாண்டுட்டார். கூடப் படுத்திருந்தவங்க அதிகாலையில எந்திரிச்சிப் பார்த்தாங்க.

மலக்காட்டு வழியில என்ன செய்ய முடியும்? அதனால அங்கனயே மலக்காட்டுல அவரோட பிணத்தை எரிச்சாங்க.

ஊருக்கு வந்து அனந்தாயிட்ட நடந்த சம்பவத்தைச் சொன்னாங்க... அவளும் விதியை நினைச்சி நொந்துக்கிட்டு செய்ய வேண்டிய கடனைச் செஞ்சாள்.

**தோ**ட்டத்துல கீரைப் பறிச்சுட்டு வந்தவ, வாயெல்லாம் ரெத்த ரெத்தமா நிற்கிற கீரிப்பிள்ளையப் பார்த்துட்டு பயந்துபோய் ஓடினா!

விசேஷமெல்லாம் முடிஞ்ச பிறகு அரிகிருஷ்ணரின் சொந்தக்காரர்கள் அவரின் சொத்துப் பத்துகளுக்கு ஆசைப்பட்டு அனந்தாயியையும் அவ புள்ளையையும் ஊரை விட்டே துரத்திட்டாங்க.

மனம் நொந்துபோன அனந்தாயி, அன்னைக்கி ராத்திரியே அந்த ஊர் மணியக்காரரான முத்தையனிடம் போய்த் தன் வழக்கைச் சொன்னாள்.

மணியக்காரர் "அம்மா, பொழுது விடியட்டும். காலையில பிரதிவாதிகளையும் கூப்பிட்டு விசாரிச்சி தீர்ப்புச் சொல்லுறேன்"னார்.

இந்தச் சேதி, அரிகிருஷ்ணரின் சொந்தக்காரர்கள் காதை எட்டியது. உடனே அவர்கள் எல்லோரும் ஒண்ணு சேர்ந்து, ராவோடு ராவா மணியக்காரரின் வீட்டுக்குப் போய் வேண்டிய மட்டும் காசு, பணத்தைக் கையூட்டாக் கொடுத்து, 'ஆண் வாரிசு இல்லாததனால உனக்கு வீடு, வாசல்லயும் சொத்து சுகத்துலயும் பங்கு இல்லை'ன்னு சொல்லித் தீர்ப்புச் சொல்லிருங்க"ன்னு சொன்னாங்க.

மணியக்காரரும் ஒப்புக்கிட்டார்.

**ம**றுநாள் காலை பொழுது விடிஞ்சதும், அனந்தாயி மணியக்

காரரின் வீட்டுக்குப் போனாள். மணியக்காரர் "அம்மா, தாயே... ராவோட ராவா உன் குடும்பப் பங்காளிமார்களைக் கூப்பிட்டு விசாரிச்சேன். நம்ம ஊர் வழக்கப்படி, ஆண் வாரிசு இல்லாதவங்களுக்குக் குடும்பச் சொத்தைக் கொடுக்கிற வழக்கம் இல்லை. அதனால, நீ உன் புள்ளையைத் தூக்கிட்டு உன் ஊருக்குப் போயிரு"ன்னு தீர்ப்புச் சொன்னார். அவளைப் பெத்தவங் களும் ஏற்கெனவே கைலாசம் போய்ச் சேர்ந்திருந்தாங்க.

கடவுளுக்குப் பிறகு மலை போல நம்பியிருந்த மணியக்காரரும் கைவிட்ட தால, அனந்தாயி மனங்கொதிச்சிக் கண்ணீர் விட்டு அழுதாள். விதியேன்னு தன் புள்ளையைத் தூக்கிக்கிட்டு, தலைவிரி கோலமா ஊராரையும், ஊர் மணியக்காரரையும், புருஷனோட சொந்தங்களையும் ஆங்காரத்தோடு திட்டி னாள்.

இதுவரை செல்வச் செழிப்போடு வாழ்ந்த நாம், கட்டின புருசன் இல்லாத இந்தப் பூமியில சொத்து சுகத்தையும், வீடு வாசலையும் இழந்துட்டு இனி எப்படி வாழறதுன்னு நினைச்சி மருகினாள்.

எங்காவது ஆறு குளத்துல விழுந்து செத்து உயிரை மாய்ச்சிரலாம்னு நினச்சவ, பிள்ளையைத் தூக்கி இடுப்புல இடுக்கிக்கிட்டு, ஊரை விட்டுக் கிளம்பி மேற்கால போய், அங்க இருந்த சுனை யில தன் புள்ளையை வீசி எறிஞ்சிட்டு "எனக்குப் பாதகமா தீர்ப்புச் சொன்ன மணியக் காரன் குடும்பமும், என் சொத்து சுகங்களைப் பிடுங்கி அப கரிச்சிக்கிட்ட குடும்பமும் வெள் ளத்தால அழிஞ்சி போகட்டும்"னு சாபம் கொடுத்துட்டு, தானும் சுனை நீருக்குள்ள விழுந்து செத்துட்டாள்.



**அவளிட்ட சாபம் பலித்தது. இடி இடித்து பேய் மழை பெய்து மணியக்காரரை அடித்துக் கொண்டு போனது.**

அனந்தாயி இட்ட சாபம் பலித்தது. உடனே மேற்கு மலையில் இடி இடித்தது. மேகம் திரண்டு கருத்தது. மின்னல் வெட்டியது. பேய் மழை பெஞ்சது. ஆத்துல இரு கரையும் பொங்க வெள்ளம் வந்தது.

ஆத்து வெள்ளம் கரை கடந்து, அணை கடந்து பெருகி வந்து மணியக் காரரின் வீடே வெள்ளத்தில் நொறுங்கிப் போச்சு. மணியக்காரரையும், அவரோட வீட்டுல இருந்தவங்களையும் வெள்ளம் அடிச்சிக்கிட்டுப் போயிட்டு. அதே மாதிரி, அனந்தாயி புருஷன் சொந்தக்காரங்க வீட்டுக் குள்ளயும் காட்டு வெள்ளம் புகுந்துட்டு. எல்லாரும், வெள்ளத்துல சிக்கி மூச்சித் திணறி செத்துட்டாங்க.

துரோகம் செய்தவங்களை, நீதி தவறி தீர்ப்புச் சொன்னவங்களை வெள் ளத்தை ஏவி அதன் மூலமா அழிச்சிக் கொன்னதால, அனந்தாயியை மக்கள் 'வெள்ள மாரி' அம்மன்'ங்கற பெயரால் சாமியாகக் கும்பிடுறாங்க"ன்னு வெள்ளமாரி அம்மனோட கதையைச் சொல்லி முடித்தார் மாயமான் குறிச்சியைச் சேர்ந்த சுடலையாண்டி என்ற பூசாரி.

(தொடரும்)

## ஜோதி பெருமாள்




என் நிலத்தில் புகுந்து
பூக்களை வேட்டையாடுகின்றன
பசித்த ஓநாய்கள்

சுவரில் அசையும்
இருள் நிழலில்
சிதறிக் கரைகின்றன
கற்பின் சுவடுகள்

வேட்கையுமற்று காதலுமற்றுக்
கசகசத்த அந்தக் கணங்களில்
வந்துபோகிறது
எனக்கென நீ இருந்த காலத்திலான
காதல்

நீள்கிறது என் இரவு
ஈட்டியாய் இறங்கும்
எச்சில் முத்தங்களோடும்
உதட்டில் வழியும் குருதியோடும்

மென்று உமிழ்ந்த
சக்கையாய்த் துவளும்
உடல்வெளியில்
மிஞ்சுகிறது
எவரோ விட்டுப்போன
மதுவின் வீச்சம்

ரகசியக் கதவுத் தட்டல்களை
எதிர்த்து மறுக்கும் நிமிடங்களில்
எவரேனும் எனை நிறுத்தலாம்
நெருப்பின் வரிசையில்

மழை சொட்டும் அறையில் தூளியில்
போர்க்கால முரசாய்
என் செவிப்பறையில் அறைந்திடும்
பசித்த என் குழந்தையின்
விடியும் வரையிலான
விரல் சப்பும் ஒலி
இங்கு எவருக்குக் கேட்கும்
என்னைத் தவிர




"எதுக்கு உங்க மனைவியோட கண்களை செக் பண்ணணும்ங்கறீங்க?"

"ஜவுளிக்கடைல பாக்கற எல்லாப் புடைவைகளையும் நல்லா இருக்குதுன்னு சொல்றா டாக்டர்!"

- அம்பை தேவா

"உங்க பையன் தூங்கறப்ப கையில ஒரு ஸ்கேலோட தூங்கறானே?"

"அவன் அளவோடு தூங்கற ஆள் சார்!"

- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்





"யார் இது, புதுசா இவ்வளவு ஸ்டைலா?"

"தெரியாதா... இவன்தான் மூக்குக் கண்ணாடி விரியனாம்!"

- வெ.சீதாராமன்



“தலைவர் மேடையில் பேசினதை அப்படியே எழுதிப் பத்திரிகைகளுக்கு அனுப்பினாயே... என்னாச்சு?”

“சிறந்த ஜோக்கா தேர்ந்தெடுத்து சன்மானம் அனுப்பி இருக்காங்க...”

- க.வேடியப்பன்





“எம்பா ராப்பிச்சை... ஏழெட்டுத் திருவோடுங்க வச்சுருக்கியே... எதுக்கு?”

“வாடகைக்கு விட்டு சம்பாதிக்கத்தான் தாயி...”

- அம்பை தேவா

# எல்லாமே நல்லாருக்கு!

“ஒரு விஷயம் பிடிக்கலைன்னா உடனே அதை விட்டு விலகிடறது தான் சிறந்தது!”

“நீங்க வேற சாமி! அவ்வளவு விரைவா எந்த கோர்ட்ல டைவர்ஸ் தர்றாங்க?”

- உ.ராஜாஜி



# இந்தக் காலத்திலும்



**கா**லை நேரம்.

வேணு ஆபீஸுக்குப் போகத் தயாராகிக் கொண்டிருந்தான். போன் ஒலித்தது. நீண்ட ஓசை 'வெளியூர் அழைப்பு' என அறிவிக்க...

'யாராயிருக்கும்...' என்ற கேள்வியுடன், ரிஸீவரை எடுத்து "ஹலோ..." என்றதும்,

"வேணுவா... நான் நாகசாமி பேசறேன்..." – மறுமுனையிலிருந்து பதற்றமான குரல்.

''அண்ணா... வேணுதான் பேசறேன். என்ன விஷயம் சொல்லுங்க...''

''சங்கர் அங்கே வந்திருக்கானாடா...''

''சங்கரா... இல்லையே..! அவன் ஏன் இங்கே வரப் போறான். நீங்க ஏன் இவ்வளவு பதற்றமா பேசறீங்க?''

''அதை என்னன்னு சொல்லுவேன். பரீட்சைல ஃபெய்லாயிட்டான். கோபத்துல ரெண்டு வார்த்தை திட்டிட்டேன். அடிக்கக்கூட இல்ல...! வீட்டை விட்டுப் போயிட்டான். ரெண்டு மூணு நாளா தேடாத இடமில்ல...''

நாகசாமி போனில் கலங்கினார்.

வேணுவுக்கு விபரீதம் புரிந்தது.

"போலீஸ்ல சொன்னீங்களா?" என்று கேட்டான்.

**படுதலம் சுகுமாரன்**

# சங்க!



"இன்னும் கொஞ்சம் தேடிட்டு, அப்புறம் போய்ப் புகார் கொடுக்கலாம்னு..."

"என்ன அண்ணா... காணாமப் போன அன்னைக்கே புகார் பண்ணியிருக்கணும். பொறுப்பில்லாம நடந்துக்கறீங்களே! கவலைப் படாதீங்க. அவன் இங்கே வந்தான்னா உடனே தகவல் சொல்றேன். நானும் நாலு எடத்துல தேடிப் பார்க்கறேன்..."

"வேணு... ஒரே புள்ளையப்பா. எப்படியாவது அவன் கிடைச்சா போதும். அவன் அம்மா... உன் அண்ணி சோறு, தண்ணி இல்லாம கிடக்கறா..." என்றபோது அவர் குரல் உடைந்தது.

அவரைத் தேற்றி, தைரியம் சொல்லி ரிஸீவரை வைத்துவிட்டு நிமிர்ந்த வேணு, வியர்த்திருந்தான்.

"என்ன விஷயம்... யார் போன்ல..."

- விசாரித்தாள் மனைவி சுசீலா.

உடனே பதில் சொல்லாமல், நாற்காலியில் போய் உட்கார்ந்த வேணு, ஏதோ யோசனை வந்தவனாய்,

"சுசீலா... இன்னைய பேப்பரும், இதற்கு முந்தைய மூணு நாள் பேப்பரும் கொண்டு வா..." என்று பரபரத்தான்.

என்னவோ ஏதோ என்று சுசீலாவும் ஓடி, பேப்பர்களைத் தேதிவாரியாக எடுத்துக்கொண்டு வந்தாள்.

"எல்லா பேப்பரிலும் பக்கங்கள் சரியா இருக்கா..." என்று கேட்டுக்கொண்டே பேப்பரில் பார்வையோட்டினான்.

நாலுநாள் பேப்பரைப் புரட்டிவிட்டு நிமிர்ந்தான். கேள்விக் குறியோடு பக்கத்தில் நின்ற மனைவியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்து,

"ஒண்ணுமில்ல... ஊர்ல நாகசாமி அண்ணன் இருக்கார்ல. அவர் மகன் பத்தாவதுல ஃபெயிலாயிட்டானாம். திட்டியிருக்காரு. கோவிச்சுக்கிட்டு வீட்டை விட்டுப் போய்ட்டானாம். மூணு நாளா தேடிக்கிட்டிருக்காராம்..."

"அடக்கடவுளே..."

"கொஞ்சமாவது அறிவிருக்கா அவருக்கு... ஃபெயிலானா என்ன... அடுத்த வருஷம் பாஸ் பண்ணிக்கறான். அப்படியே பாஸாகலைன்னாலும் என்ன கெட்டுப் போச்சு! நாகசாமி சொத்துப் பத்து உள்ள ஆசாமி. அவரோடு இருந்து விவசாயத்த கத்துக்கிட்டு பிழைச்சுட்டுப் போறான். அந்தக் காலத்துப் பசங்க போலவா இப்ப உள்ள பசங்க இருக்காங்க. அப்பங்காரன் அடிச்சுத் துவைச்சாலும் வாங்கிக்கிட்டு, அம்மாகிட்ட அழுது தீர்த்துக்குவான். வருத்தம்னாகூட ஊருக்குள்ளதான் எங்காவது இருந்துட்டு பொழுதடைய வீட்டுக்குப் போயிருவான். இவனுக்கும் வலி குறையும். அப்பனுக்கும் கோபம் குறையும்; சரிதான் மெய்தான்னு ஒண்ணு கூடிக்குவாங்க. இந்தக் காலத்துப் பசங்க ரொம்ப சென்ஸிடிவ். பரீட்சை சரியா எழுதலையோங்கற சந்தேகத்துலயே விபரீத முடிவெடுத்துடறாங்க.

**ஐயன் காணாமப் போன அன்னைக்கே போலீஸ்ல புகார் கொடுக்க வேணாமா? பொறுப்பில்லாம நடந்துக்கறீங்களே அண்ணா!**

"என்னப்பா சர்வர்... சாப்பிடுறதுக்கு முன்னாலயே வெத்தலையைக் கொண்டாந்து வைக்கிறே?"

"நீங்க 'மினி மீல்ஸ்'தானே கேட்டீங்க... இந்த இலையிலேதான் போடுவோம்... மொத்தமா சுருட்டி வாயில போட்டுக் கணும்!"

- ஃபாத்திமா



மார்க் குறைஞ்சு போச்சுன்னு மன சொடிஞ்சு தவறான பாதைக்குப் போயிடறாங்க. பேப்பர்ல இந்த மாதிரி செய்தி - ரிசல்ட் சீஸன்ல ஏராளமா வருது. இதைப் பார்த்தாவது பெத்தவங்க ஜாக்கிரதையாவும் பொறுமையாகவும் இருக்க வேணாமா...! மூணு நாளா காணலைன்னா என்ன அர்த்தம்..."

படபடப்பாகப் பேசினான் வேணு...

கணவன் அவசரமாய் பேப்பர்களில் தேடியது என்னவென்பதை உணர்ந்துகொண்ட சுசிலா, தானும் அவன் கவலையில் கைகோத்தவளாய்,

"நினைச்சுப் பார்க்கவே கஷ்டமாயிருக்கு. அவனுக்கொன்னும் ஆகாம இருக்கணும். பேப்பர்ல விளம்பரம்கூட கொடுக்கலாமே. எங்கிருந்தாலும் வீட்டுக்கு வரச் சொல்லி" என்றாள் சோகமாக.

அப்போது வாசலில் யாரோ வந்து நிற்பது போல், செருப்புச் சத்தம் கேட்டது.

"நினைச்சுப் பார்க்கவே கஷ்டமாயிருக்கு. அவனுக்கொன்னும் ஆகாம இருக்கணும். பேப்பர்ல விளம்பரம்கூட கொடுக்கலாமே."

"யாரு?"

வேணுவின் குரலுக்குத் தயக்கமாய் முகம் காட்டினான். 'காணாமல் போய்' அப்பா, அம்மா உட்பட அனைவரின் வயிற்றிலும் புளியைக் கரைத்த அந்த சங்கர்.

அவனைப் பார்த்ததும் வேணுவுக்கும், சுசிலாவுக்கும் ஒரு சேர முகம் மலர்ந்தது.

"வாடா சங்கர்..." - ஆர்வமாக வரவேற்றான் வேணு.

உள்ளே வந்த சங்கர் வேணுவையும், சுசிலாவையும் மாறி மாறிப் பார்த்து,

"நான் வீட்டைவிட்டு வந்துட்டேன். பரீட்சையில ஒரு சப்ஜெக்ட்ல போயிடுச்சு. அப்பா கன்னாபின்னான்னு திட்டினாரு..."

"தெரியும்... கொஞ்சம் முன்ன அப்பா கிட்டருந்து போன் வந்துச்சு. பாவம்... ரொம்ப பயந்து போயிருக்காரு. நாங்களும் உனக்கு என்னாச்சோ, ஏதாச்சோன்னு கவலைப்பட்டோம். அந்த அளவுக்கு விபரீதமா ஏதும் பண்ணி வைக்காம தைரியமா இங்கே வந்தே பாரு.. அதுவே போதும். உன் மனசு சமாதானம் ஆகறவரை நீ இங்கே இருக்கலாம். சரியா..."

"தேங்க்ஸ்..."

"சுசீலா... சங்கருக்கு டிபன் கொடு."

"வாப்பா சங்கர்."

"ஒரு நிமிஷம்..." சங்கர் வாசலுக்கு ஓடினான்.

வெளியில் நின்றிருந்த யாரையோ, உள்ளே வரச் சொன்னான்.

யாரை அழைக்கிறான் என்று வேணு குழப்பத்துடன் பார்த்துக் கொண்டிருக்க, சங்கரின் பின்னால் மறைந்தபடி அவன் வயதொத்த ஒரு பெண் உள்ளே வந்தாள்; மிரட்சியாகப் பார்த்தாள்.

"இவ பேரு கவிதா. என் க்ளாஸ்மேட்..."

"சரி... இவளை எதுக்குக் கூட்டிக்கிட்டு வந்தே..."

"இவளும் என்ன மாதிரிதான். ஒரு சப்ஜெக்ட்ல ஃபெயிலாயிட்டாள்..." என்றான் சங்கர். ○

# சரோஜா வைத்யநாத ஐயர் பரம்பரை ஜோதிடர்

ஜோதிடத்தில் **50** வருட அனுபவம் கொண்ட

"ஜோதிட வாணி"

## ஸ்ரீமதி சரோஜா வைத்யநாத ஸ்வாமி ஐயர்

கைரேகை, ஜாதகம், நியூமராலஜி, வாஸ்து, சாமுத்ரிகா லக்ஷணம், திருமணப் பொருத்தம், அனைத்தும் பார்க்கப்படும்.

அனைத்து ஆலோசனைகளும் வழங்கப்படும்.

*வெளியூரில் வசிப்பவர்கள் அதிகபட்சமாக 5 கேள்விகள் வரை கேட்க ரூ.500/- கட்டணத்தை முன்னதாகவே அனுப்பவும்.*

**V.சரோஜா, 45/18, ஸ்ரீநிவாச ஐயர் தெரு, மேற்கு மாம்பலம், அயோத்யா மண்டபம் அருகில், பிள்ளையார்கோவில் அருகில் உள்ள தெரு.**

**Ph: 23716892, Cell: 9444230523, 9444684006, 9444506218**

---



### வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)

**"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"**

29-30, கிழக்கு ஐயன் தெரு, கும்பகோணம் - 612 001.

Phone: (0435) Office 6532239 Patasala : 6532238, 2422866 Fax No. 2425948

E.mail: Vedagdps@sancharnet.in Website:www.rajapatasala.in

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளைப் போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக் கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 465 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 17 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப் புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் "ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்" என பெயரிடப்பட்டு 21.6.2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | **Rs.500** | **Rs.8,000** |
| அமாவாஸ்யை **(or)** பௌர்ணமி **(or)** கிருஷ்ண **(or)** சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு (Please choose one specific day of a particular month in a year for Samarthanai) | **Rs.1,500** | **Rs.25,000** |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ. **1000/-** | **Rs. 12,000 P.A** | **Rs.2 Lakhs** |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D/Cheque-ஐ **A.V.M.S.G.D.P.S. Samithi** என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

# ஒரு லட்ச ரூபாய் பரிசுப் போட்டி!

பகுதி - 1, பகுதி - 2 கையில ரெடியா? சூர்யாவுக்கு அசத்தலான கேள்வி ரெடியாயிடுச்சா?

கேளுங்க... பதில் சொல்ல வி.ஐ.பி. ரெடியாயிட்டாரு!

1. சூர்யாவின் முதல் படம்...
   - ☐ நேருக்கு நேர்
   - ☐ ஸ்ரீ
   - ☐ நந்தா
2. ஜோதிகா அறிமுகமான படம்...
   - ☐ டும் டும் டும்
   - ☐ காக்க காக்க
   - ☐ வாலி
3. சூர்யாவும் ஜோதிகாவும் இணைந்து நடித்த முதல் படம்...
   - ☐ உயிரிலே கலந்தது
   - ☐ காக்க காக்க
   - ☐ பூவெல்லாம் கேட்டுப்பார்
4. சூர்யா - விஜய் இணைந்து நடித்த படம்...
   - ☐ ஃப்ரண்ட்ஸ்
   - ☐ குஷி
   - ☐ மின்சாரக் கண்ணா
5. ஜோதிகா இரு வேடங்களில் நடித்த படம்...
   - ☐ மொழி
   - ☐ தூள்
   - ☐ பேரழகன்



முதல் இரண்டு வார கல்கி இதழை மிஸ் பண்ணிட்டீங்களா? கவலையே வேண்டாம்! முழு முகவரியோடு ரூ.24/- மணியார்டர் கல்கிக்கு அனுப்புங்க. புத்தகம் உங்களைத் தேடி வரும்.

# உங்க சூர்யா வர்றாரு... பரிசைத் தர வர்றாரு!



**கேளுங்கள்; வெல்லுங்கள் போட்டி - 1 பகுதி - 3**

பெயர் : ..................................................................

முகவரி : ..................................................................

..................................................................

..................................................................

தொலைபேசி : ..................................................................

இ.மெயில் : ..................................................................

மறக்காதீங்க!!

* ஜெராக்ஸ் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

* ஆசிரியரின் தீர்ப்பே இறுதி * கடைசி தேதி 18.4.2007

## போட்டி-1 பகுதி-3

# மணி, மந்திரம், ஔஷதம்

புஷ்பராகம், பத்மராகம், கோமேதகம், வைரம், வைடூரியம், இந்திர நீலம், முத்து, மரகதம், பவழம், இவை ஒவ்வொன்றால் ஆன வெளிப் பிரகாரங்களை உடைய 'சிந்தாமணி கிருஹம்' என்ற அற்புதமான கோட்டையில் அம்பிகை தன்னை பாதுகாத்துக் கொள்ள வாசம் செய்கிறாள் என்று 'சௌந்தர்ய லஹரி' என்ற மந்திர சாஸ்திரமாக போற்றப்படும் நூலின் எட்டாவது பாடலில் கூறப்பட்டுள்ளது. தன்னை பாதுகாத்துக் கொள்ள தேவியே டன் கணக்கில் இரத்தினங்களை உபயோகிக்கிறாள் எனில் பாமரர்களாகிய நாமும் ஏன் அவற்றை உபயோகிக்கக் கூடாது?

எனது முப்பது வருட டாக்டர் தொழிலில், எந்த நோயாளிக்காவது ஆறு மாதத்திற்கு மேலாக வைத்தியம் செய்தும் பலனளிக்காத கேசுகளில் அவருக்கு ஏற்ற இரத்தினங்களை அணியச் செய்ததில் நல்ல குணம் கிடைத்தது. உதாரணமாக 2, 11, 20, 29 தேதிகளில் பிறந்தவர்கள் அல்லது பிறந்த தேதி, மாதம், வருடம் ஆகியவற்றை கூட்டி வரும் எண் 2 என்றாலும். தவிர, ஜூன் 21 - ஜூலை 20 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பிறந்தவர்களும் 2-ம் எண்காரர் எனப்படுவர். இவர்களுக்கு அநேகமாக ஜீரணக் கோளாறுகள் இருக்கும். எந்த மருந்தும் பலனளிக்காது. ரூ.780 விலையுள்ள 'சைனீஸ் ஜேட்' என்ற இரத்தினத்தை அணிந்த பிறகு அவர்களது வயிறு நிரந்தரமாக குணமாகியது.

இதேபோல் 3, 12, 21, 30 தேதிகளில் பிறந்தவர்கள் (அல்லது பிறந்த தேதி, மாதம், வருடம் ஆகிய மூன்றையும் கூட்டினால் மூன்று ஆக வந்தாலும்) தவிர பிப்ரவரி 20 - மார்ச் 20 அல்லது நவம்பர் 21 - டிசம்பர் 21 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பிறந்தவர்களையும் 3-ம் எண்காரர் என்கிறோம். இவர்களுக்கு தலைவலி வந்தால் அது எந்த மருந்துக்கும் கட்டுப்படாது. 'எமிதிஸ்ட்' என்ற இரத்தினம் (ரூ.1500)அணிய தலைவலி இருந்த இடம் தெரியாமல் குணமாகி விடுவது பலரது அனுபவம்.

கான்சர் நோய் சீரியஸாகி சில வாரங்களே உயிர் வாழ்வாள் என்று சொல்லப்பட்ட ஒரு பெண்மணி வைடூரியம் (ரூ.3,800) மற்றும் மரகதம் (ரூ.4,600) அணிந்த பின்பு எழுந்து நடமாட ஆரம்பித்தாள். பவழம் (ரூ.2,800) அணிந்த பின்பு பிரிந்த தம்பதிகள் ஒன்று சேர்ந்தனர். வெண் பவழம் (ரூ.1,500) மற்றும் புஷ்பராகம் (ரூ.4,800) அணிந்து கொள்ள, சர்க்கரை வியாதி (டயபிடீஸ்) குறைந்தது. இதுபோல் தாமதமான பதவி உயர்வு கோர்ட் விவகாரம் சுமுகமாக முடிந்தது, தீராத வியாதிகள் குணமானது, நீண்ட நாட்களான பிரச்சினைகள் தீர்ந்தது போன்றவை நான் அனுபவத்தில் பார்த்துள்ளேன்.

நவரத்தினங்களை அணிந்து பலன் ஏதும் ஏற்படவில்லை என பலர் சொல்வதற்கு நகைக் கடையில் இரத்தினங்களை வாங்கி சக்தி செய்யாமல் அணிவதே காரணம். இரத்தினங்களை சக்தி செய்து அணிவது மிக அவசியம்.

மலச்சிக்கல் முத்து (ரூ.1,500) அணிந்த பிறகும் அலர்ஜி கோமேதகம் (ரூ.2,300) அணிந்த பிறகும் பல வருட தோல் வியாதிகள் பவழம், நீலம் (ரூ.4,800), லாபிஸ் லஸுலி (ரூ.480) அணிந்த பிறகும் குணமானது. கன்னிப்பெண்கள் பவழம் அணிய திருமணம் கைகூடியது. நீலக்கல் + புஷ்பராகம் + பவழம் அணிய, வியாபாரம் இலாபகரமாக நடைபெற்று வர தொடங்கியது.

செல்வராஜ் சங்கீதத்தில் புலமை உள்ளவர். ஆனால் சான்ஸ் ஏதும் கிடைப்பதாக இல்லை. 'அகேட்' (ரூ.1,200) என்ற இரத்தினம் அணிந்த பின் இன்று இலண்டன் நிலையத்தில் இசையமைப்பாளராக இருக்கிறார். அருண்குமார் நல்ல ஓவியர். ஆனால் ஒன்று கூட விற்கவில்லை. அகேட் அணிந்த ஆறே மாதத்தில் நிறைய விற்பனையாகி இன்று கார், பங்களா என்று இருக்கிறார். இராமசாமி நடத்தி வந்த லாரி சர்வீஸ் பலத்த நஷ்டம். காரணம் அடிக்கடி நடந்த லாரி விபத்து. 'டர்க்வாய்ஸ்' இரத்தினம் (ரூ.480) ஒவ்வொரு லாரியின் டீசல் டாங்க்-ல் போட அதன் பிறகு விபத்து நிகழவில்லை.

நமது வாழ்க்கைப் பிரச்சினை, ஏழ்மை நீங்க முதலில் 'மணி'யின் (இரத்தினங்களின்) உதவியை நாட வேண்டும். இது பலனளிக்காத பட்சத்தில் மட்டுமே மந்திரங்களை உச்சாடனம் செய்ய வேண்டும். இதுவும் பலனளிக்காத ஒரு சில கேசுகளில் மட்டுமே 'மருந்து' என நம் மூன்னோர் "மணி, மந்திரம், ஔஷதம்" என வரிசைப் படுத்தி வைத்துள்ளனர்.

> ஆம்! உலகில் உள்ள எல்லா நல்ல சக்திகளையும் (கடவுளின் பலம், சக்தி உட்பட) நவரத்தினக் கற்கள் தன்னுள் அடக்கி வைத்துக் கொண்டுள்ளன. இவற்றை அணிய, நம்மிடம் உள்ள தேவையில்லாத சுபாவங்கள், மற்றவர்களுக்கு பிடிக்காத செயல், தன்னம்பிக்கையின்மை போன்ற தன்மைகள் உறிஞ்சப்பட்டு வெளியேற்றப்படுகின்றன.

2-3 லட்சத்திற்கு கார், வீடு வைத்திருப்பதால் நமது வருமானம் அதிகரிக்காது. இவற்றால் அடிக்கடி செலவு நிச்சயம் உண்டு. செலவு ஏதும் வைக்காமல் பண வரவு, சௌகர்யங்கள் ஆகியவற்றை (மறைமுகமாக) தொடர்ந்து கொடுத்துக் கொண்டேயிருப்பது இரத்தினக் கற்கள் மட்டுமே!

**உங்களுக்கேற்ற இரத்தினம் பெற்றுக்கொள்ள ஜாதகம் அல்லது பிறந்த தேதியுடன் நேரில் (காலை 10 முதல் 5 மணி வரை மட்டும்) அணுகவும். கட்டணம் ரூ.200=00**

**Dr. V. கிருஷ்ணமூர்த்தி**

**ஞாயிறு, திங்கள்:**
Raman House, Old No.21,
குப்பையா செட்டி தெரு,
மேற்கு மாம்பலம்,
சென்னை - 33.
Ph. : 6539 3214, 2489 0370

**புதன், வியாழன், வெள்ளி:**
**Wednesday to Friday**
402/41, 38th 'A' Cross
26th Main (Opp. to SBM)
Jayanagar - 9th Block,
Bangalore - 69
Ph. : 3292 2523, 2245 0969

**எமது வெளியீடுகள் (தமிழ் புத்தகங்கள்)**

வாழ்க்கைப் பிரச்சினைகள் நீங்க இங்கிலாந்து மலர் மருந்துகள் (பாகம் 1 to 17) ரூ.750=00

தியானம் செய்யும் முறை ... ... ... ... ... ... ... ... ... ... ரூ.70=00

**சென்னை விலாசத்திற்கு M.O. செய்யவும். தபால் செலவு இனாம். V.P.P. இல்லை.**

Advt

குறட்டை... பல்வேறு வயதினரிடையேயும் இன்றைக்குக் காணப்படும் பொதுவான ஒரு பிரச்னை. சாதாரணமாகத் தோற்றமளிக்கும் இதன் பின்னணி பயங்கரமானது. இது குறித்துக் கேட்டபோது, குறட்டை எதனால் வருகிறது, அதற்கான நவீன சிகிச்சைகள் என்ன என்பது குறித்து நம்மிடம் விளக்கினார் சென்னை, சாந்தோம் சைனஸ் அண்ட் நோஸ் மருத்துவமனையின் காது, மூக்கு, தொண்டை நிபுணரான டாக்டர் ஹரிணி.

“மூக்குக்கும் தொண்டைக்கும் பின்னால் உள்ள மூச்சுக்குழல், உள்விட்டத்தில் சுருங்குவதே குறட்டை ஏற்படுவதற்கு முதல்படி.



**ஒருவர் பலமாகக் குறட்டைவிட்டு உறங்கும்போது அந்த நபருக்கு மூச்சுத் தடை ஏற்பட வாய்ப்புண்டு!**

தங்கு தடையின்றி மிக எளிதாகச் சென்று திரும்ப வேண்டிய நம் சுவாசக் காற்று, மூச்சுக் குழலின் சுருக்கம் காரணமாக அதிக அழுத்தத்துடனும் அதிவேகத்துடனும் செல்ல வேண்டியுள்ளது.

எப்படி ஒரு புல்லாங்குழலின் துளைகளைச் சிறிதளவு அடைக்கும்போது இசை கிளம்புகிறதோ... அப்படி நம் மூச்சுக் குழலில் காற்று செல்லும்போது சிறிய தடை உண்டாகி, ஓசை எழும்புகிறது. இதுதான் குறட்டை!

சிறிய விசில் சத்தத்தில் துவங்கி, பஸ் ஹாரன் சத்தமிடும் அளவுக்குக் குறட்டையில் ஒலி அதிர்வு வித்தியாசப்படுவது இயல்பு.

குடிப்பழக்கம் உள்ளவர்களுக்கும் புகை பிடிப்போருக்கும் உடல் பருமனாக உள்ளவர்களுக்கும் குறட்டை அதிகமாகத் தொல்லை தரும். சிலருக்கு நாக்குப் பெரிதாக, தடிமனாக இருக்கும். இவர்கள் மல்லாந்து படுத்துறங்கும்போது நாக்குப் பின்பக்கம் சரிந்து மூச்சுக்குழலை அடைத்துக்கொள்வதால் குறட்டை வரும்.

குழந்தைகளுக்கு அண்ணச் சதை வீங்கும்போது குறட்டை ஏற்படலாம். வயதானவர்களுக்கு உள்நாக்குச் சதைகள் தளர்ந்து விடுவதால் குறட்டை வருவதுண்டு. இதுபோல் தொண்டைச் சதை வீக்கம், அண்ணத்தில் உண்டாகும்

வீக்கம்... இப்படி சுவாசக் காற்று செல்லும் குழலில் எந்த அடைப்பு ஏற்பட்டாலும் குறட்டை துவங்கிவிடும்.

நடைமுறையில் குறட்டையை நாம் வெகு சாதாரணமாகவே கருதுகிறோம். ஆனால், மருத்துவ ஆராய்ச்சியாளர்களின் கருத்து வேறு!

ஒருவர் பலமாகக் குறட்டைவிட்டு உறங்கும்போது அந்த நபருக்கு 'மூச்சுத் தடை' ஏற்பட வாய்ப்புண்டு! இதற்குத் 'தூக்க மூச்சடைப்பு' என்று பெயர்.

தூக்கத்திலேயே உயிர் போனால் மாரடைப்புதான் காரணமாக இருக்கும் என்று முன்பு நம்பி வந்தனர். ஆனால்,


• டாக்டர் ஹரிணி

# குறட்டைக்கு குட்பை!

இதற்குத் தூக்க மூச்சடைப்பும் ஒரு முக்கிய காரணம் என்பதை இப்போது மருத்துவர்கள் நிரூபித்துள்ளனர்.

தூங்கும்போது சிலருக்கு அடிக்கடி மூச்சுத் திணறுவது போலவும், யாரோ கழுத்தை அமுக்குவது போலவும், மூச்சுவிட முடியாமல் சிரமப்படுவது போலவும் தோன்றினால், அது தூக்க மூச்சுத்தடையின் விளைவு என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

இன்றைய நவீன மருத்துவ உலகில் குறட்டைக்குப் பலவித சிகிச்சைகள் உள்ளன. முதலில் குறட்டை நோயாளியை மருத்துவமனையில் அனுமதித்து, அவரது உறக்கத்தைக் கண்காணிக்கிறார்கள். உறக்கத்தின்போது அவரது உடலில் செல்லும் பிராண வாயுவின் அளவு, இதயத் துடிப்பு, நாடித் துடிப்பு, இரத்த அழுத்தம் எல்லாவற்றையும் கணக்கிலெடுத்து, அவருக்கு எத்தகைய மூச்சுத் தடை உள்ளது என்பதைக் குறித்துக் கொள்கிறார்கள்.

இதனையடுத்து, குறட்டை விடும் நபரின் மூக்கில் 'CPAP' (Continuous Positive Airway Pressure) என்னும் சிறு இயந்திரம் ஒன்றைப் பொருத்தி விடுகிறார்கள். இந்த இயந்திரம் காற்றழுத்தத்தைச் சீராக்கி, ஒரே அளவில் உடலுக்குள் பிராண வாயு செல்வதற்கு உதவுவதால் குறட்டையும் ஏற்படுவதில்லை; மூச்சுத் தடையும் உண்டாவதில்லை.

இன்னொன்று uvulo plato-pharyngo plasty சிகிச்சை. இந்த சிகிச்சையில் மூக்கிலும் தொண்டையிலும் உள்ள தேவையற்ற தசைகளை நீக்கி, சுருங்கியிருக்கும் மூச்சுக் குழாய் விரிவாக்கப்படுகிறது. தொண்டைக்குள் செய்யப்படும் இந்தச் சிகிச்சையால் தழும்பு எதுவும் ஏற்படாது. மூன்றே நாளில் வீட்டுக்குத் திரும்பி விடலாம்.

இப்போது இதே சிகிச்சையைக் கத்தியின்றி, இரத்தமின்றி, எந்தவித வலியுமின்றி லேசர் கருவி மூலமும் செய்கிறார்கள். ஒரு நாள் மருத்துவமனையில் இருந்தால் போதும், மறுநாளே குறட்டைக்கு குட்பை சொல்லி விடலாம்" என்கிறார் டாக்டர் ஹரிணி.

- ப்ரியா

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

முத்துராமன் வீட்டுக்கு வந்தபோது தம்பி மட்டும்தான் இருந்தான். குப்புறப் படுத்துக்கொண்டு ஏதோ சினிமா புத்தகம் படித்துக் கொண்டிருந்தான்.

அவனுடைய உலகம் சினிமா பத்திரிகைகளால் ஆனது. அக்கப்போர்களும் அடிதடி விவகாரங்களும் நடிகர்களின் சொத்து விவரங்களும் நடிகைகளின் காதல் மற்றும் விவாகரத்து சங்கதிகளும். தன்னைப்போல் அரசியலில் அவனுக்குள் கனவுகள் ஏதும் இருக்கிறதா என்பதை அறிய முத்துராமன் பல சமயங்களில் முயற்சி செய்து பார்த்திருக்கிறான். கட்சி மீட்டிங்குகளுக்கு வருவதிலோ, தேர்தல் காலப் பணிகளை ஆர்வத்துடன் பார்ப்பதிலோ அவன் குறை வைத்ததில்லை. ஆனால், அரசியலில் அவனது பெரிய லட்சியம் பிரியாணிப் பொட்டலமாக மட்டுமே இருக்கிறது என்று முத்துராமனுக்கு எப்போதும் தோன்றும்.

தானொரு எம்.எல்.ஏ. ஆக முடிந்தால் தம்பியின் எதிர்காலம் குறித்த கவலைகள் இல்லாது போகும் என்று முத்துராமன் சில உறக்கம் வராத இரவுகளில் நினைத்திருக்கிறான்.

"அம்மா எங்கடா?"

"தெரியல. பக்கெட்ல துணி எடுத்துக்கினு வெளியே போனாங்க."

பிறகெப்படித் தெரியாமல் போகும்? பக்கெட்டில் துணி எடுத்துக் கொண்டு இஸ்திரி போட யாரும் போக மாட்டார்கள். துணி துவைக்க

**"கொலகில செய்யப் போறியா?" என்று அவள் கேட்டதும், முத்துராமனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.**

என்று ஏன் இவனுக்குச் சொல்லத் தோன்றவில்லை? முத்துராமனுக்குத் தன் தம்பியைப் பற்றிய கவலைகளுள் இது பிரதானமானது.

எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் இவனுக்கு ஏதாவது செய்துவிட வேண்டும் என்று நினைத்துக்கொண்டு முத்து ராமன் வேகமாக வெளியே வந்தான்.

**மா**நகராட்சி நவீன கழிப்பிடம். கட்டிய நாளாகக் கழுவப்படாத இடம். அந்தப் பிராந்தியத்தை நாறடித்துக் கொண்டிருந்த கட்டடம். குப்பத்தின் கொசு உற்பத்தி பிரதானமாக அங்கிருந்துதான் தொடங்குவதாக முத்துராமன் நினைத்தான். ஆற்றங்கரைப் பணிகள் முடிந்த பிறகு இந்த இடத்துக்கு ஏதாவது செய்ய முடிந்தால் தேவலை என்று தோன்றியது.

ஆனால், என்ன செய்தாலும் இரண்டு நாள்தான். பினாயில் ஊற்றிக் கழுவ வேண்டிய இடம் வெளியில் இல்லை என்று நினைத்தான். ஒவ்வொரு வருடமும் மலேரியாவும் டெங்குவும் பருவகாலம் தவறாமல் அங்கிருந்து வந்து குப்பத்தைத் தாக்கிவிட்டுப் போகின்றன. ஏன் யாருக்கும் இது உறுத்தவே இல்லை?

அவனுடைய அம்மாவும் விலக்கல்ல. தினம் தவறாமல் மாநகராட்சி நவீன கழிப்பிடத்தின் வாசலில் இருக்கிற அடிபம்பில்தான் துணி துவைக்கிறாள். நிறுவப்பட்டபோது சில நாட்களுக்கு நல்ல தண்ணீர் வந்தது. பிறகு கலங்கலாக வந்து விமர்சனங்களுக்கு உள்ளானது. திடீரென்று வண்ணமயமான தண்ணீரை குப்பத்துக்கு ஒரு நாள்

அறிமுகப்படுத்தியது. அப்புறம் தண்ணீர் வராத தினங்கள். கைப்பிடியும் ஒரு நாள் காணாமல் போனது. ஏதோ ஒரு தேர்தல் சமயத்தில் மீண்டும் குழாய்க்குக் கைப் பிடியும் குழாயில் தண்ணீரும் சாத்திய மானது. மக்கள் துணி துவைக்கவும் குளிக்கவும் கைகால் கழுவவும் அதனைப் பயன்படுத்தத் தொடங்கினார்கள்.

ஒரு சந்தர்ப்பம். ஒரே ஒரு சந்தர்ப்பம் தனக்குக் கிடைத்துவிட்டால் போதும் என்று மீண்டும் அவன் நினைத்தான். பெரிய புரட்சிகள் சாத்தியமாகா விட்டாலும் சில அடிப்படைகளைத்

"என் மகள் சம்பந்தமே இல்லாமல் எப்பவும் சிரிச்சுக்கிட்டே இருக்கா, டாக்டர்..."

"டீவில காம்பயரிங் பண்றதை நிறுத்தச் சொல்லுங்க, தன்னால சரியாயிடும்!"

– சீர்காழி ரேவதி



தன்னால் மாற்ற முடியும் என்று தோன்றி யது. எதிர்வரும் கார்ப்பரேஷன் தேர்தலில் நுழைய முடிந்துவிட்டால் போதும்.

தங்கவேல் அண்ணன் விளையாட்டா கக் கேட்டாரா, சீரியஸாகக் கேட்டாரா என்று அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. நாய் வாலாட்டுவதற்கு உயரே கையைத் தூக்கிப் பொறையை ஆட்டுவது போலத் தன்னை கவுன்சிலர் தேர்தலுக்குத் தயாராகச் சொல்லியிருப் பாரோ என்றும் தோன்றியது.

அவனுக்கு நிச்சயமாகத் தெரியும்... தனது வார்டில் கண்டிப்பாகத் தான் வெற்றி பெறுவதற்குப் பெரிய இடைஞ்சல் கள் இருந்துவிட முடியாது. இத்தனை வருடங்களில் தன்னைத் தெரியாதவர்கள் குப்பத்தில் யாரும் இருக்க முடியாது. நல்லவன். சமூக சேவகன். நேர்மையான டெய்லர். ஏன் வோட்டுப் போட மாட்டார்கள்?

சுயேட்சையாக நிற்பது குறித்த சிந்தனை இப்போதைக்கு வேண்டாம் என்று நினைத்தான். எப்படியாவது தங்கவேல் அண்ணன் சொன்னபடி சீட் வாங்கிக் கொடுத்துவிட்டால் போதும். அவராக விரும்பி சீட் கொடுக்கிற அளவுக்கு ஏதாவது செய்ய முடிந்தாலும் தேவலை. என்ன செய்வது? 'சிங்காரம் என்னா செலவு செய்யறான்? அந்தக் கணக்கக் கண்டுபிடி. அத்தினியும் கள்ளப்பணம்' கேட்ட குரல் மீண்டும் மனத்தில் எதிரொலித்தது. கண்டுபிடிக் கலாம். பெரிய விஷயமில்லை. கணக் கெழுதி வைக்கும் பெருசுகள் தனக்குச் சொல்ல மாட்டேன் என்று கூறப்போவ தில்லை. தவிரவும் மண் அடிக்கும் டிரைவர்கள் தெரிந்தவர்கள். கூலிக்கு வரும் ஆட்களையும் அவனுக்குத் தெரியும். பணப் பட்டுவாடா செய்யும் வட்டச் செயலாளரின் பி.ஏ.வும் அறியாத முகம் அல்ல. கூப்பிட்டு உட்காரவைத்து ஒரு ஹாஃப் ஊற்றிக் கொடுத்தால் வட்டத்தின் அடுத்த ஐந்தாண்டு திட்டங்களைப் பத்திரத்தாளில் எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்து விடுவான்.

எதுவும் சாத்தியம். எல்லாமே சாத்தியம். ஆனால், இது ஒரு பெரிய காரியமா? தன்னிடம் தங்கவேலண்ணன் இவ்வளவுதானா எதிர்பார்ப்பார்? தன்னால் ஆகக்கூடிய இக்காரியத்தைச் சாதித்துக்கொள்ள அவருக்கு எத்தனை நேரம் ஆகிவிட முடியும்? இருந்த இடத்தி லிருந்து ஒரு கொசுவை ஏவிவிட்டால், அடுத்த வினாடி எடுத்து வந்து கடைவிரித்துவிடாதோ? இல்லை; சற்றே பெரிய அளவில் தலைவர் விரும்பும்படி ஏதாவது செய்ய வேண்டும் என்று அவனுக்கு நிச்சயமாகத் தோன்றியது. அதற்கான சந்தர்ப்பம் கண்டிப்பாகத் தனக்கு வரும் என்று நினைத்தான்.

குழாயடியில் துணி துவைத்துக் கொண்டிருந்த அம்மாவிடம் இதைப் பற்றிப் பேசியபோது, "என்னமோ போ.

உங்க வம்சமே ஆசப்பட்டு தோத்துத்தான் போச்சி. நீயானா செயிச்சி மேல வந்தன்னா சந்தோசம்தான்'' என்று சொன்னாள்.

"அப்பிடி இல்லம்மா. அப்பாவுக்கும் சித்தப்பாவுக்கும் அரசியல்ல என்னா ஆவணும்னு ப்ளான் எதுவும் இல்லாம இருந்திச்சி. கொடி கட்னாங்க. மைக் செட் ஏற்பாடு பண்ணாங்க. எலக்சன் வந்தாக்கா, ரோட்டுல பெஞ்சு போட்டு உக்காந்து வார்டு வாரியா சீரியல் நம்பர் பாத்து சனங்களுக்கு சீட்டு எழுதிக் குடுத்தாங்க. எலக்சன்ல நாம நிக்கணும், மேலுக்கு வரணும்னு நெனச்சிப் பாக்கவே இல்லம்மா. அதுக்குன்னு வேலை செய்யாம ரிடையர் ஆனப்பறம் நான் முன்னுக்கு வரமுடியலன்னு அளுதா யாரு என்னா பண்ண முடியும்?''

''அதெல்லாம் எனுக்கு எதுக்குடா? தபாரு, நீ என்னா செய்யிறே, எப்பிடி செய்யறே, யாருக்கு வேலை செய்யிறேன்னு எனுக்குத் தெரியாது. உங்கப்பாவுக்குத் தெரியுமோ என்னமோ... நாலு காசு சம்பாரிக்கிறியா? சந்தோசம். உன்னிய சுத்தி நாலு பேரு நிக்குறானுங்களா... சந்தோசம். பதவிக்கு வரியா? ரொம்ப சந்தோசம். கடும்பாடி அம்மனுக்கு அங்கப்பிரதட்சணம் செய்வேன். பொட்டச்சி எனுக்கு என்னாடா தெரியும் அரசியலும் மண்ணாங்கட்டியும்? உங்கப்பனக் கட்டிக்காம இருந்திருந்தன்னா, இப்ப தெரிஞ்ச அளவுக்குக்கூடத் தெரிஞ்சிருக்காது. எங்கப்பாரும் காங்கிரஸ்காரருதான். சொதந்தர தெனத்தன்னிக்கி முட்டாய் எடுத்தாருவாரு. அவ்ளோதான். கொடி குத்திக்கினு போவாரு. எலக்சன்னு வந்தா மொத ஆளா பூத்துல நின்னு ஓட்டுப் போடுவாரு. அவ்ளோதான் தெரியும். எனுக்கு என்னா வோணும்? நீ நல்லாருக்கணும். அவ்ளோதான்.''

"நான் அத கேக்கலம்மா. இப்ப நான் மேல வரதுக்கு ஒரு சான்சு கிடைக்கறாப்ல இருக்குது. செல தப்புக் காரியம் செய்ய வேண்டியிருக்கலாம். யாரையும் மிதிக்காம மேல வரமுடியாது போலருக்குதும்மா.''

அவள் முத்துராமனை சில வினாடிகள் உற்றுப் பார்த்தாள்.

"செரி... அதுக்கு?''

''இல்ல... உம்புள்ள இப்பிடி ஒரு காரியம் செஞ்சிட்டான்னு நாளைக்கு யாரானா சொன்னாக்கா, நீ கஸ்டப்படுவியான்னு கேக்கறேன்?'' மிகவும் கவனமாகச் சிரித்து மழுப்பியபடி கேட்டான்.

அவள் சற்று நேரம் பேசாதிருந்தாள். பிறகு குரலைத் தாழ்த்தி, ''கொலகில செய்யப் போறியான்னா?'' என்று கேட்டாள்.

முத்துராமனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. தான் என்ன சொல்ல

''இந்தப் படம் பயங்கரமான சண்டைப் படமாம்...''

''அப்படியா?''

''படம்விட்டு வெளியில வர்றவங்க எல்லாருடைய சட்டையும் கிழிஞ்சிருக்குன்னா பார்த்துங்க!''

**- எம்.அசோக்ராஜா**



வருகிறோம், இவன் என்ன புரிந்து கொள்கிறான்? எதை எப்படிச் சொன்னால் சரியாகப் புரியும்? யோசித்தான். பிறகு சொன்னான்.

"கொல இல்லம்மா... ஆனா அதவிடப் பெரிசா செலதுங்கள செய்ய வேண்டியிருக்கும்னு தோணுது. ஒனக்கு எப்பிடிப் புரிய வெக்கறதுன்னு தெரியல...''

அவள் நீண்ட பெருமூச்சு ஒன்றை வெளிப்படுத்தினாள். பிறகு சொன்னாள்: ''கடும்பாடி அம்மன் கோச்சிக்கற மாதிரி எதுவும் செஞ்சிராத. புரியுதா?''

(தொடரும்)





# இடுக்கண்

## இது நம்ம ஆளுங்க!












# வருங்கால்...



## இது நம்ம பங்காளிங்க!



பாகிஸ்தான்ல போய் இறங்கினதும் ரசிகர்கள் துரத்துவாங்க. அப்போ, இப்படித்தான் ஓடணும். கரெக்டா ட்ரெய்னிங் எடுத்துக்கங்க.



நல்லா பார்த்துக்கங்க. இதுதான் வெஸ்ட் இண்டீஸ், அயர்லாந்து டீம் எங்களுக்குக் காட்டின தண்ணி.

இந்த அயர்லாந்து பசங்களுக்கு ரொம்பத்தான் நக்கல். நேத்து ஒருத்தன் போன் பண்ணி 'முப்பது நாட்களில் கிரிக்கெட் கற்கலாம்'னு ஒரு புஸ்தகம் இருக்கு. வேணுமான்னு கேட்கறான்.



நல்லா கேட்டுக்கங்க. நான் ரிட்டயர்ட் ஆயிட்டேன்னு யாராவது பொறுப்பா விளையாடினீங்கன்னா தொலைச்சுப்புடுவேன் தொலைச்சு! அப்படியே மெயின்டன் பண்ணணும், சரியா?



கற்பனை : குசும்புராஜ்

# துறுதுறு...பரபர...

குழந்தைகள் என்றாலே துறுதுறு வென விளையாடிக்கொண்டும் பரபர வென அலைந்து ஆடிக்கொண்டும் தான் இருப்பார்கள். ஆனால் இந்தத் துறுதுறு - பரபரத் தன்மை மிதமிஞ்சிய அளவில் ஒரு குழந்தையிடம் காணப்பட்டால் அது ADHT என்கிற Attention Deficit Hyperactivity Disorder ஆக இருக்கலாம்.

**அறிகுறிகள் :**

★ செயல்களில் பரபரப்பும் வயதுக்கு மீறிய உந்துதலும் இருக்கும். ஆனால் ஒரு செயலைச் செய்யும்போது ஒருமுகத் தன்மைக் குறைவும், கவனக் குறைவும் இருக்கும்.

★ மிகவும் உணர்வு பூர்வமானவர் களாக இருப்பர்.

★ மனம் பரபரத்துக் கொண்டு இருக்கும்.

★ படிப்பில் மறதி, புரிந்து கொள்ளும் திறனில் சிரமம் இருக்கும்.

★ கால்களை அசைத்துக் கொண்டே இருப்பர்.

★ பள்ளிப் பாடங்களைச் செய்வதில் பொறுமை இருக்காது.

★ அடம் பிடித்தல், முரண்டு பிடித்தல் போன்ற குணங்கள் அதிகமாக இருக்கும்.

★ ஒரு செயலைச் செய்து கொண்டு இருக்கும்போதே அடுத்த செயலுக்குத் தாவுவார்கள்.

★ கேள்வி கேட்டு முடிப்பதற்குள்ளே பதில் சொல்லும் 'முந்திரிக் கொட்டைத் தனம் அதிகமாகக் காணப்படும். அதே போல், நாம் பேசிக்கொண்டிருக்கும் போதே குறுக்கிட்டுப் பேசி இடையூறு செய்வார்கள்.

இந்த நோயை, சரியாக நிர்ணயம் செய்வதுதான் சிரமமான விஷயம். இதனைச் சரியாகக் கண்டுபிடிப்பதற்கு நிதானமும், நல்ல அனுபவமும் வேண்டும். நவீன மருத்துவத்தில் சைக்கோ ஸ்டி ம்யுலன்ட் போன்ற மருந்துகளைப் பயன் படுத்திக் கண்டறிந்து கொள்கின்றனர்.

இந் நோயை நிர்ணயம் செய்வதில், சிரமம் இருப்பதால் தவறு நேர்ந்து விடுமோ என்று பெற்றோர்கள் அஞ்சு கின்றனர்.

ஆயுர்வேதம், வாயுவின் சலனகுணத் தால் இந்தக் குறைபாடு ஏற்படுகிறது என்று கூறுகிறது. இதனையே பகவத் கீதையும் 'வாயு மிகவும் சலனத் தன்மை உடையது' என்கின்றது.

**சிகிச்சை :**

இதற்கு நவரை அரிசியால் காய்ச்சப் பட்ட ஷாஷ்டிக தைலம் கொண்டு அப்யங்கம் செய்யலாம். தாமரையினால் காய்ச்சப்பட்ட பஞ்சாரவிந்தம் நெய்யைக் கொடுப்பது சிறந்தது ஆகும்.




# குழந்தைகள்!

பெற்றோர்கள் இக் குழந்தைகளை 5 - 10 நிமிடங்கள் ஒரே இடத்தில் உட்கார்ந்திருக்கப் பழக்க வேண்டும். அதோடு, ஒரே செயலைச் செய்ய வைக்க வேண்டும். அதனை முடித்த பின்பே அடுத்த வேலைக்குச் செல்ல வேண்டும் என்று பொறுமையாகச் சொல்லிக் கொடுத்துப் பழக்கப்படுத்த வேண்டும்.

மிக அதிகப் பொறுமை இதற்குத் தேவைப்படும். கல்யாண பூசணியால் காய்ச்சப்பட்ட அஷ்டதல கூஷ்மாண்ட கிருதம், மஹா ஸாரஸ்வத கிருதம், சேதஸ கிருதம் போன்ற மருந்துகள் நல்ல பலனைத் தருகின்றன. ருத்ராக்ஷம், வல்லாரை, சங்கபுஷ்பி, தாமரை, அதிமதுரம், கொட்டம், தண்ணீர்விட்டான் கிழங்கு, திராட்சை ஆகியவை கலந்த சூரணங்கள் பலனளிக்கின்றன. வல்லாரை, வெட்டிவேர், சந்தனம், தாமரை, நன்னாரி ஆகியவற்றினால் செய்யப்பட்ட பஞ்ச கந்த சூரணத்தை அரைத்து தலையில் பசை போல் தடவி தாமரை இலையினால் கட்டி வைக்கின்ற 'தலைப் பொதிச்சல்' என்ற சிகிச்சையும் நல்ல பலனைத் தருகிறது. க்ஷீரபலா தைலம் அல்லது தான்வந்தர தைலத்தை 30 மிலி அனுவாசன வஸ்தியாகக் (எனிமா) கொடுக்கலாம். இந்த சிகிச்சையின் மூலம், நாளடைவில் பரபரப்புத் தன்மை குறைந்து விடும்.

**தன்வந்தரி டாலர் பரிசுப்போட்டி 12-ல் மாதவிடாயின்போது ஏற்படும் வயிற்றுவலியைப் போக்கும் மருந்துக் குறிப்பு எழுதி முதல் பரிசைப் பெறுபவர் லலிதா வெங்கட்ரமணன், மைலாப்பூர்.**

மலைவேம்பு மரத்தின் துளிர் இலைகளைப் பறித்து, மைய அரைத்து, குளித்த நான்காம் நாள், ஐந்தாம் நாள் இருநாட்களும் வெறும் வயிற்றில் உண்ண (ரொம்பக் கசக்கும். தொண்டைக் குழியில் வைத்து விழுங்கிவிட வேண்டும்), மாதவிடாயின் பொழுது ஏற்படும் வயிற்று வலிக்கு நல்ல நிவாரணம் கிடைக்கும்.

**இரண்டாம் பரிசாக டாக்டர் எல்.மஹாதேவனின் தேவமருந்து முதல் பாகத்தைப் பெறுபவர் ஜி.ஞானாம்பாள், மதுரை.**

மாதவிடாயின்போது ஏற்படும் வயிற்று வலியைப் போக்க, உளுத்தங்களி செய்து சாப்பிடலாம். உளுந்தைச் சிவப்பாக வறுத்துக் கொள்ளவேண்டும். 1 பங்கு உளுந்துக்கு 1/2 பங்கு பச்சரிசி எடுத்து அதையும் சிவப்பாக வறுத்துக் கொள்ள வேண்டும். இரண்டையும் சேர்த்து மிஷினில் மாவாகத் திரித்து வைத்துக் கொண்டு, தேவையான போது எடுத்துக் களி செய்யலாம். 1 கரண்டி திரித்த மாவை எடுத்துத் தண்ணீர் விட்டுக் கரைத்து, அடுப்பில் வாணலியில் விட்டுக் கிளறவும். அவ்வப்போது நல்லெண்ணெய் விட்டுக் கிளறவும். நன்றாக வெந்ததும் தேவையான கருப்பட்டியைப் போட்டுக் கிளறவும். இந்த உளுத்தங்களியைச் சாப்பிட்டு வந்தால் வயிற்று வலி போய்விடும்.

**டாக்டர். எல்.மஹாதேவன்**

# பூப்பெய்தும் பருவத்திலுள்ள பெண்களுக்குத் தரத்தகுந்த ஊட்டச்சத்து எது தெரியுமா?



தன்வந்தரி டாலர் பரிசுப்போட்டி என் 13ல் பூப்பெய்தும் பருவத்திலுள்ள பெண்களுக்குத் தரத் தகுந்த ஊட்டச் சத்துக் குறிப்பினை எழுதி முதல் பரிசைப் பெறுபவர்: அங்கையற்கண்ணி அம்மையப்பன், திருநெல்வேலி

குறிப்பு : உளுத்தம் பருப்பு ஒரு படி, அரிசி கால் படி இரண்டையும் கலந்து (உ.பருப்பை இலேசாக வாசம் வரும்வரை வறுக்கவும்) திரித்துக் கொள்ளவும். 2 கிலோ கருப்பட்டியைச் சிவி தண்ணீரில் போட்டு கரைந்ததும் சல்லடையில் வடிகட்டி (மணல் நீக்கி), மாவில் ஊற்றி, துண்டுகள் இல்லாமல் கரைத்துக்கொண்டு, கனத்த வாணலி அல்லது உருளியில் கால் படி நல்லெண்ணெய் விட்டு, காய்ந்ததும் கரைத்த மாவுக்கலவையைப் போட்டு, அடி பிடித்துவிடாமல் அடிக்கடி கிண்டி, வெந்தபின் (கையில் ஒட்டாத பதம்) இறக்கி, உருண்டைகளாக உருட்டி வைத்துக் கொடுக்கவும்.

**இரண்டாவது பரிசாக தேவமருந்து முதல் பாகத்தைப் பெறுபவர் : எஸ்.கோமதி, பெரும்பாலூர்**

குறிப்பு : எள்ளை, கல் அரித்து, வெயிலில் உலர்த்தி எடுக்க வேண்டும். அதை வறுத்துப் பொடியாக்கிக் கருப்பட்டியும் சேர்த்து இடித்துக் கொடுக்கலாம். இதைக் கொஞ்சம் நாட்கள் வைத்திருந்து கொடுக்க முடியும். ருசிக்காக வறுத்த அரிசி மாவும் தேங்காயும் சேர்த்துப் பிசைந்து ஒரு வேளை உணவாகக் கொடுக்கலாம்.

"பையன் டாக்டராக இருக்கலாம். அதுக்காகப் பொண்ணு பிடிச்சிருக்கான்னு கேட்டதுக்கு, 'எதுவா இருந்தாலும் 48 மணி நேரம் கழிச்சுத்தான் சொல்ல முடியும்னு சொல்றது கொஞ்சம் கூட நல்லா இல்ல."

– பவினோத்ராஜா



**தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி எண் 20**

குழந்தைகளுக்கு நினைவாற்றல் அதிகரிக்கும் வழிமுறைகளையும், கைமருந்துகளையும் எழுதி அனுப்புங்கள். சிறந்த குறிப்புக்கு முதல் பரிசாக தன்வந்தரி டாலர், இரண்டாவது பரிசாக டாக்டர் எல்.மஹாதேவனின் தேவ மருந்து முதல் பாகம் வழங்கப்படும்.

ஆசிரியரின் தீர்ப்பே இறுதி. **கடைசி தேதி 09.04.2007**

# காதல் இருக்கும்

பேர்லயே ஒளிஞ்சுக்கிட்டிருக்கு படத்தோட கதை. தெளிந்த நீரோடை மாதிரி இல்லாம ஏகப்பட்ட சிக்கல் நிறைந்த திரைக்கதை, உயிரோட்டம் இல்லாத வசனங்கன்னு பல விஷயங்கள் ரசிகனோட பொறுமையைச் சோதிக்குது. கதாநாயகன் விஷ்வகுமார், சண்டைக் காட்சிகள்ல மட்டும் நல்லா பண்றாரு.

கௌரவப் பாத்திரத்துல பாக்யராஜ். அவரோட வழக்கமான நடிப்பு இதுலயும் உண்டு. ஆனா, விழலுக்கு இறைச்ச நீர். பாடல்களுக்கு நடுவுலதான் படம் பார்க்க முடிஞ்சது. ஆறுதல் தர்ற விஷயங்களா கவின் சாரதாவோட இசையும், யு.கே.செந்தில்குமாரோட ஒளிப்பதிவும். கதை, திரைக்கதை எழுதி திருமங்கையா நடிச்சிருக்கற ஜி.ஆர். மனசுல நிக்குறாரு. இதே மாதிரி மத்த பாத்திரங்களும் இதயத்துல இடம் பிடிக்க உழைச்சிருக்கலாம் படத்தோட இரண்டு இயக்குநர்களும்.

என்னைக்காவது ஒரு நாள் சினிமாவுல இயக்குநராக மாட்டோமான்னு இலட்சியக் கனவுகளை சுமந்துக்கிட்டு கோடம்பாக்கத்துல சுத்திக்கிட்டிருக்கிற இலட்ச இளைஞர்களோட பிரதிநிதியா இந்தப் படத்தின் ஹீரோ. மியூசிக் டைரக்டராகணும்னு போராடுற நண்பன். ரெண்டு பேரும் சேர்ந்து கஷ்டப்படுறதைப் பார்க்கற ஹீரோயின், 'நானும் ஒளிப்பதிவாளராகணும்ங்கிற ஆசையிலதான் வெளிநாட்டுல படிச்சிட்டு வந்திருக்கேன். மூணு பேரும் சேர்ந்தே ஒரு படத்தை உருவாக்கலாமே'ன்னு ஐடியா கொடுக்க, 'நிறம்' படம் ரெடியாகுது. அறிமுக நாயகன் மணி, இயல்பான நடிப்புக்கு உத்தரவாதம் தர்றாரு. படத்துல நக்கல் நையாண்டிக்குப் பஞ்சமில்லை.

சபேஷ் முரளியோட இசை, ரம்யம். ஜெயபாலனின் கேமராவால கண்ணுக்குள்ள பசுமைப் புரட்சி. கோடம்பாக்கத்துல கொடி நாட்டக் கஷ்டப்படுறதைப் பல படங்கள்ல பார்த்துட்டோம். இதுல கொஞ்சம் வித்தியாசமா காண்பிச்சிருக்காங்க, அவ்ளோதான்.

- லஜ்ஜாவதி



# நிறம்

# காரியசித்தி தரும் கரியமாணிக்க பெருமாள்!



சென்னையில் எத்தனையோ பழைமையான கோயில்கள் உண்டு. அவற்றுள் ஒன்றுதான் எண்ணூறு ஆண்டுகாலப் பழைமை வாய்ந்த அயனாவரம் கரியமாணிக்க பெருமாள் கோயில். சோழர் காலத்தில் கட்டப்பட்ட இந்தக் கோயிலைப் பற்றி நம்மாழ்வார் திவ்யப் பிரபந்தத்தில் பத்துப் பாசுரங்கள் பாடியுள்ளார். அயனாவரத்திலிருந்து ஆவடி போகும் வழியில் அமைந்திருக்கும் கரியமாணிக்க பெருமாள் கோயிலை வலம் வருவோமா?

பரந்து விரிந்து விசாலமாக அமைந்திருக்கிறது கோயில் வளாகம். எங்கும் துளசி வாசனை. பின்னணியில் 'ஓம் நமோ நாராயணா' மந்திர ஒலி. பக்தர்கள், கனகவல்லி சமேத கரியமாணிக்க பெருமாளைச் சுற்றி வந்து கொண்டிருக்கின்றனர். திரளான கூட்டம். பழைய கோயில் என்றாலும் பெருமாள் அல்லவா... நித்தியப்படி பூஜைகள் நடைபெறுகின்றன. சக்கரத்தாழ்வாருக்கு புதிதாகச் சன்னதி அமைக்கப்பட்டுள்ளது. அவருக்கு மறுபுறம் உக்ரமாக நரசிம்மர் அவதாரம் கொண்டிருக்கிறார். கோயிலின் பின்னால் கனகவல்லித் தாயாருக்கும் ஆண்டாளுக்கும் தனித் தனிச் சன்னதி.

வசந்த மண்டபத்தில் அமைந்த

புன்னை மரம் இந்தக் கோயிலின் தல விருட்சம். நிறைந்த செடி, கொடிகள், பூத்துக் குலுங்கும் மலர்கள் என பார்க்கப்படு ரம்யம். வைகாசி மாதம் நடைபெறும் வைகாசி உற்சவத்தில் இந்த வசந்த மண்டபம் ஏகமாய் களைகட்டி விடுமாம். ஆஞ்சநேயரைச் சுற்றியும் எப்போதும் பக்தர்கள் கூட்டம். வடைமாலை சாத்துகின்றனர். ராம பஜனைகள் நடக்கின்றன. இன்னொரு பக்கம் சஹஸ்ரநாம பாராயணம்.

ஒவ்வொரு சனிக்கிழமையும் விசேஷ பூஜை. புரட்டாசி சனிக்கிழமைகளில் நடக்கும் பூஜைகள் சிறப்பு வாய்ந்தவையாகக் கருதப்படுகின்றன. கருட சேவையும் புஷ்ப அலங்காரமும் ராஜ அலங்காரமும் அப்போது நடைபெறுகின்றன.

இந்தக் கோயிலைச் சுற்றிய பகுதிகளிலேயே பன்னிரு கோயில்கள் இருக்கின்றன. பெருமாள் கோயிலை அடுத்து அமைந்திருப்பது பரசுராம ஈஸ்வரன் கோயில். பெருமாள் கோயிலும் ஈஸ்வரன் கோயிலும் அருகருகே அமைந்திருப்பது மற்றுமொரு சிறப்பு.

**திருமணம், குழந்தையின்மை, நிம்மதி, பணம் சேர என்று அனைத்தையும் அருளக் காத்திருக்கிறார் கரிய மாணிக்க பெருமாள்**

நினைத்த காரியத்தை கரியமாணிக்க பெருமாள் வசம் ஒப்படைத்து விட்டால், சற்றுத் தாமதமானாலும் நடந்துவிடும் என்பது இங்கு வரும் பக்தர்களின் பேச்சாக இருக்கிறது. ஒருவரிடம் நாம் பேச்சுக் கொடுத்தபோது, மகள் திருமணம் தடைபட்டுக் கொண்டே வர, யாரோ சொல்லி இங்கு வந்து வேண்டிக்கொண்ட பின் நடந்ததை மகிழ்ச்சியுடன் கூறினார்.

திருமணம், குழந்தையின்மை, நிம்மதி, பணம் சேர என்று அவரவருக்கு ஆயிரம் பிரச்னைகள். அனைத்தையும் அருளக் காத்திருக்கிறார் கரிய மாணிக்க பெருமாள். வந்து ஒருமுறை கண்டு செல்லலாமே?

**- ராம்**

படங்கள்: **சி.கே.மாறன்**

# வாகனங்களுக்குத் தீ வைக்கும்

சென்னை மக்கள் சமீப காலமாக பீதியில் உறைந்திருக்கிறார்கள். குறிப்பாக, தங்கள் வாகனங்களை இரவில் நிறுத்துவதற்குப் பாதுகாப்பான இடம் இல்லாதவர்கள், கொஞ்சம் அதிகமாகவே பதற்றத்தில் இருக்கிறார்கள். காரணம்? இரவு நேரங்களில் சில மர்ம நபர்கள் வீடுகளில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் வாகனங்களுக்குத் தீ வைத்து விடுகிறார்கள். இவர்கள் யார் என்று கண்டுபிடிப்பது போலீசுக்குப் பெரும் சவாலாக உள்ளது. போலீஸ் தரப்பில் கேட்டால், 'நடவடிக்கை எடுக்கப்படுகிறது' என்று சொல்கிறார்களே தவிர, இதுவரை யாரையும் பிடிக்கவில்லை.

மர்ம நபர்கள் தங்கள் தீ வைப்பு வேலையை மிகச் சுலபமாக செய்துவிட்டுப் போய்விடுவது சம்பந்தப்பட்ட பகுதி மக்களிடம் பேசியபோது தெரிய வருகிறது.

வடபழனியில் இருக்கும் சிவன் கோயில் தெருவில் ஒரு வீடு. உள்ளே காம்பவுண்டு சுவரையொட்டி ஒரு மோட்டார் சைக்கிள் நிறுத்தப்பட்டிருக்கிறது. மர்ம ஆசாமி (ஆசாமிகளாகவும் இருக்கலாம்) மோட்டார் சைக்கிளின் பெட்ரோல் டாங்கைத் திறந்து, ஒரு துணியை அதனுள்ளே விட்டு, பெட்ரோலில் நனைத்து, அதனை அந்தத் துணியை மோட்டார் சைக்கிளின் சீட் மீது போட்டு, தீ வைத்துவிட்டுப் போய் விடுகிறான். அடுத்தடுத்து வாகனங்கள் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள இடங்களில், ஒன்றுக்கு மேற்பட்ட இரண்டு சக்கர வாகனங்களுக்கு இதே டெக்னிக்கைப் பயன்படுத்தி தீ வைக்கப்பட்டிருக்கிறது.

"இரவு மூன்று மணி வரை டி.வி.யில் கிரிக்கெட் மேட்ச் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு அப்போதுதான் நாங்கள் தூங்கப் போனோம். அதிகாலை ஐந்து மணி இருக்கும். திடீரென்று வெளியில் ஏதோ சத்தம் கேட்டது. வந்து பார்த்தால் ஒரு மாருதி கார் தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது'' என்கிறார்கள் வடபழனி சிவன் கோயில் தெருவாசிகள். அதே அதிகாலையில் சுமார் ஒரு மணி நேரத்தில் மூன்று, நான்கு கார்கள் தீக்கிரையாகி இருக்கின்றன.

"பெட்ரோலில் நனைக்கக் கையில் கிடைக்கும் துணியைப் பயன்படுத்துகிறார்கள். ஒரு வீட்டில், மோட்டார் சைக்கிளுக்குப் பக்கத்தில் கொடிக்கயிற்றில் காய்ந்துகொண்டிருந்த உள்ளாடையை எடுத்து பெட்ரோலில் நனைத்துத் தீ வைத்




திருக்கிறார்கள்'' என்கிறார் காவல்துறை உதவி ஆணையாளர் (தி.நகர்), பாஸ்கரன்.

"இந்த நபர்களின் நோக்கம் வாகனங்களை முழுமையாகச் சேதப்படுத்த வேண்டுமென்பது இல்லை. இது சேதப்படுத்துப்பட்ட வாகனங்களைப் பார்க்கிறபோது தெரிய வருகிறது'' என்கிறது காவல்துறை வட்டாரம். முதலில் இது மனநலம் குன்றியவர்களின் கைவரிசையாக இருக்கலாம் என்று சந்தேகித்த போலீஸ், இது மக்கள் மனத்தில் பீதி ஏற்படுத்தும் நோக்கமாகவும் இருக்கலாம் என்றும் சந்தேகப்படுகிறது.

"சென்னைப் பெருநகரக் காவல் நிலையங்கள் அனைத்துக்கும், இரவு நேர ரோந்துக் கண்காணிப்பை அதிகரிக்கும்படி காவல்துறை இணை ஆணையாளர் ஜாங்கிட் உத்தரவிட்டிருக்கிறார். அதன்படி, இன்ஸ்பெக்டர்கள் மற்றும் சப்-இன்ஸ்பெக்டர்கள் தலைமையில் பதினெட்டு போலீஸ் டீம் அமைக்கப்பட்டு, புலனாய்வுப் பணிகள் முடுக்கிவிடப்பட்டுள்ளன. ஆயுதமேந்திய அறுபது காவலர்கள் அசோக்நகர் மற்றும் வடபழனிப் பகுதிகளில் ரோந்துப் பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். இது தவிர, சுமார் இருநூறு காவலர்கள், வாகனங்களுக்குத் தீ வைக்கும் மர்ம நபரைப் பிடிக்கும் பணியில் முழு மூச்சாய் இறங்கியுள்ளனர். எங்களிடம் சில தடயங்கள் சிக்கியுள்ளன. இந்தச் சமூகவிரோதச் செயலில் ஈடுபட்டவர்களைச் சுற்றி நாங்கள் அமைத்துள்ள வட்டம் குறுகிக்கொண்டே வருகிறது. இன்னும் சில நாட்களில் குற்றவாளிகள் சிக்கிவிடுவார்கள்'' என்று கூறும் உதவி ஆணையாளர் பாஸ்கரன், பொதுமக்களுக்குச் சில ஆலோசனைகளையும் கூறுகிறார்...

"இரவு நேரங்களில், தெருக்களில் வாகனங்களை நிறுத்தி வைப்பதைத் தவிர்த்து விடுங்கள். வீட்டு காம்பவுண்டுக்குள் வாகனங்களை நிறுத்தும் இடத்தில் விளக்கு வெளிச்சம் இருக்கும்படி பார்த்துக்கொள்ளுங்கள். எக்ஸ்னோரா போன்ற பொது நல அமைப்புகள் மற்றும் குடியிருப்போர் நலச் சங்கங்கள் தங்கள் பகுதிகளில் இரவு நேர ரோந்துப் பணியை மேற்கொண்டால் வாகனங்களுக்கும் பாதுகாப்பு; காவல் துறைக்கும் உதவிகரமாக இருக்கும்.''

- கௌதம் ராம்

**இருநூறு காவலர்கள் அந்த மர்ம மனிதனைப் பிடிக்கும் முயற்சியில் ஈடுபடுத்தப்பட்டிருக்கின்றனர்!**

# நீங்கள் கேட்டவை

● **இ.அரவிந்த், நாமக்கல்**

**? கட்சித் தலைவர்களுக்குச் சிறைத் தண்டனை கொடுத்தால் பஸ்களைக் கொளுத்துவதும் கிரிக்கெட்டில் தோற்று விட்டால் வீரர்களின் வீடுகளை இடிப்பதும் நியாயமா?**

! பொருளாதாரக் குற்றங்கள் மீதான வழக்குகளிலும் கிரிக்கெட் விளையாட்டிலும்கூட கட்சி அரசியலைப் புகுத்துவது நியாயமா?

● **நீ.முத்துக்குமார், திருச்சி - 102**

**? ஈழத்தில் நம் தமிழ் மக்கள் எந்த நிலையில் உள்ளனர்?**

! இருதலைக் கொள்ளி எறும்பு நிலையில்.

● **பெ.இராம் முருகன், சிவகங்கை**

**? மதுக் கடைகளைப் பாதியாகக் குறைக்காவிட்டால் பா.ம.க. மகளிர் அணியினர் சிறை செல்லும் போராட்டம் நடத்துவார்களாமே?**

! அதென்ன பாதி என்றுதான் புரியவில்லை. மீதி கடைகளில் மொத்த வியாபாரமும் போய்ச் சேர்ந்து சக்கை போடு போடுமே! மதுவுக்கான செலவு தவிர, அதைத் தேடிப்போகும் செலவும் அல்லவா கூடும்!

● **வீ.பெரியசாமி, அரியலூர் ★**

**? 'தமிழகத்தில் நல்ல நிலையிலுள்ள பனை மரங்களிலிருந்து கிடைக்கும் கருப்பட்டியை ரயில்வேயில் டீ, காபிக்குப் பயன்படுத்தினால், பனை மரத் தொழிலாளர்கள் ஆண்டுக்கு ஐயாயிரம் கோடி வருமானம் பெறுவர்' என்று அவர்களது நலவாரியத் தலைவர் குமரி அனந்தன் கோரிக்கை வைத்துள்ளாரே?**

! கருப்பட்டி சுவை பழக்கப்பட்டவர்களுக்கு மட்டுமே ருசிக்கும் என்பதால் ரயிலில் டீ, காபி வியாபாரம் படுத்து விடும். கருப்பட்டியில் உள்ள இரும்பு - சுண்ணாம்புச் சத்தை, இங்கு குழந்தைகளிடையே நிலவும் ரத்த சோகை நோயை ஒழிக்க எப்படிப் பயன்படுத்தலாம் என்று யோசிப்பது நல்லது.

● **பாலா சரவணன், சென்னை - 15**

**? 'உலகக் கோப்பைக்கு என்னை அனுப்பியிருந்தால்கூட நன்றாக கிரிக்கெட் விளையாடியிருப்பேன்' என்று லாலு கூறியுள்ளாரே...?**

! வாயால் சிக்ஸர் அடிப்பதற்கு என்ன...? அதை வாயில்லா பூச்சிகூட செய்ய முடியும்!

● **கே.எஸ்.கோவர்த்தனன், சென்னை - 42**

**? 'குடி உள்ளே புகுந்ததால் வரலாறு தெரியாமல் உளறுகிறார்' என்று விஜயகாந்த் பற்றி கருணாநிதி கூறுவது நியாயமா?**

! நியாயமே அல்ல; குடி உள்ளே புகுந்திருந்தால் அத்தனை துல்லியமாக நிரூபணங்களுடன் கருணாநிதிக்கு விஜயகாந்த் பதில் கூறி விவாதத்தில் வீழ்த்தியிருக்க முடியாது.

● **அ.கலைஹல் ரஹ்மான், திருச்சி-21**

**? ரேஷன் கடைகளில் பருப்பு, சமையல் எண்ணெய் விற்கப்படும் என்று பட்ஜெட்டில் அறிவிக்கப்பட்டுள்ளதே...?**

! நோக்கம் நல்ல நோக்கம்தான். ஆனால், நடைமுறையில் வெற்றி காண்

• 'குடி' குற்றச்சாட்டு!



• ஆசை மொழி!



• கருப்பட்டி கவலை!



பது கஷ்டம். அரிசி கடத்தல் போல இவையும் கடத்தலுக்குள்ளாகும்; ரேஷனில் தரக்குறைவான சரக்கு விற்பனைக்கு வரும்; இத்யாதி இத்யாதி பிரச்னைகள். உற்பத்தி பெருக்குவதே சிறப்பான ராஜபாட்டை.

● மு.செந்தில்குமார், கொடாப்பு

**? 'வாடி வாடி நாட்டுக்கட்டை' பாடல் எழுதியதற்காக வருந்துவதாக கவிஞர் அறிவுமதி கூறியுள்ளாரே?**

! காலம் கடந்து வருந்தியிருந்தாலும் வருத்தத்தை ஏற்போம். இனியும் வருந்தும் படியான காரியத்தைச் செய்ய மாட்டார் என்று நம்புவோம்.

* சிநேகமற்ற திணிப்பு!

# 'டைனமிக்' கலாசாரம் எப்படி?

● ஜி.கிருஷ்ணமூர்த்தி, சென்னை-11

**? நாய் வாலை நிமிர்த்துவதில் தன் நண்பர்விட்ட சவாலில் ஜெயித்துக் காட்டியிருக்கிறாராமே சேலத்தைச் சேர்ந்த அதன் பயிற்சியாளர்?**

! பாவம் அந்த நாய். பயிற்சியாளரின் வெற்றிக்காக எத்தனை துன்பம் அனுபவித்ததோ? நான் அவர் நிலையில் இருந்திருந்தால் சவாலை ஏற்றிருக்க மாட்டேன். அரசியல்வாதியைத் திருத்திக்காட்ட முடியுமா என்று எதிர் சவால் விட்டிருப்பேன்.

● த.பரதன், திருவாரூர் ❐

**? கோடிக்கணக்கான ரசிகர்கள் நேரிலும் டீ.வி.யிலும் ஆட்டத்தைக் கூர்ந்து கவனிக்கும்போது, பெவிலியனில் இருக்கும் வீரர்கள் சக ஆட்டக்காரர் ஆடுவதை கவனிக்காமல் புத்தகம் படிப்பது பற்றி...?**

! சக ஆட்டக்காரர் ஆடும் லட்சணத்தைப் பார்த்தால் எங்கே தனது ஆட்டமும் சொதப்பலாகி விடுமோ என்ற கிலியில் புத்தகத்தைப் புரட்டுகிறார்களோ என்னவோ!

* பொய்த்த பேச்சு!



* சொல்லால் சிக்ஸர்



**- தராசு**



• யுனைடட் கணக்கு!



• லேட்டான வருத்தம்!

• டி.ஜி.எஸ்., சென்னை

**? கவிஞர் சிநேகனின் டைனமிக் கலாசாரம் எப்படி இருக்கிறது?**

! பண்பாடு என்பது ஒவ்வொரு நாட்டிலும் காலப்போக்கில் வெவ்வேறு வகைகளில் வளர்ந்து உருவாகும் சீரிய பழக்கவழக்கங்கள். அவற்றைப் பலவந்தமாக மாற்றி, கட்டிப் பிடித்துத் திணிப்பது சிநேகிதமான அணுகுமுறை அல்ல.

• ஜெ.ஜெயராணி, மதுரை - 4

**? "தி.மு.க. என்பது பனங்காட்டு நரி. அது ராமதாஸ் போன்றவர்களின் சலசலப்புக்கு அஞ்சாது" என்று வெற்றிகொண்டான் பேசியிருக்கிறாரே?**

! அஞ்சிவிட்டதே!

• வே.ந.கதிர்வேல், வேலூர்

**? "இந்தியாவின் பெயரை யுனைடட் ஸ்டேட்ஸ் அஃப் இந்தியா என்று மாற்றினால் உலக அரங்கில் வல்லரசாகத் திகழும்'' என்று விஜய டி.ராஜேந்தர் சொல்கிறாரே?**

! பெயர் மாறினால் மட்டும் வல்லரசாகிவிடாது. பெயருக்கேற்ப 'யுனைடட்'ஆக இருந்து ஒன்றுபட்டு நாட்டின் உயர்வுக்கு எல்லோருமே உழைத்தால் கலாம் கண்ட கனவும் 'விஜயன்' நம் முன் வைக்கும் இலக்கும் நனவாக வாய்ப்பு உண்டு. அதற்கு முதலில் அரசியல்வாதிகள் மனம் மாற வேண்டும்.

• எஸ்.டி.எஸ். கோவிந்தராஜன், அரங்கநாதபுரம்

**? மின் அஞ்சல் முறையில் வாசகர்கள் பங்குபெற முடிவதால், பல பிரபல இதழ்களில் அவ்வசதி இல்லாத வாசகர்கள் தாழ்த்தப்பட்டவர்களாகி விடுகிறார்களே?**

! கவலைப்படாதீங்க; இன்றைய நிலவரப்படி தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தானே முன்னுரிமை!

• ஜி.சக்திவேல், சிதம்பரம்

**? இந்திய அணியின் தோல்விக்குக் காரணம் சொதப்பல் ஆட்டமா? பிட்ச்சா? பங்களாதேஷின் அபார திறமையா?**

! அங்கிங்கெனாதபடி எதிலும் புகுந்து விளையாடும் அரசியல்தான் - அதுவே அடிப்படைக் காரணம். இரண்டாவது பணம். இந்த இரண்டின் செல்வாக்கையும் தடுத்து, திறமைக்கு மட்டுமே அடி முதல் நுனிவரை மதிப்பளித்தால் தோல்வி தீண்டாது. ஹூம்... நடக்கிற காரியமா? ("டீம் அமைத்த விதமே சரியல்ல" என்கிறார் சாப்பல்; பலிகடா ஆக்கப்படுவார்!)

• எம்.தூசிமுத்து, சென்னை - 11

**? கனிமொழி முதல்வராக வர வேண்டும் என்ற வாலியின் ஆசை பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?**

! நான் நினைப்பது கிடக்கட்டும். அழகிரியும் ஸ்டாலினும் என்ன நினைக்கிறார்கள்?!

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
த.பரதன்,
65, கூட்டுறவு நகர்,
விளமல்,
திருவாரூர் - 613 701

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
வீ.பெரியசாமி,
தேளூர் அஞ்சல்,
அரியலூர் தாலுகா - 621 704

# அமரர் கல்கி



ஏறக்குறைய ஒன்பது மாதம் ஆகிறது. தினந்தோறும் தவறாமல் இரண்டு வேளை குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்து வருகிறேன்.

இரண்டு மாதத்துக்கு ஒரு முறையாயிருந்து, மாதாந்தரமாகி, மாதம் இருமுறை, மும்முறை, வாராந்தரம், வாரம் இருமுறை, மும்முறை எல்லாமாகிக் கடைசியில் தினசரியாகியிருந்த ஜலதோஷம், இப்போது மறுபடியும் பின்னோக்கிச் சென்று மாதம் ஒரு முறைக்கு வந்திருக்கிறது. இனி நான் வெந்நீரின் அடிமையல்லன். குளிர்ந்த ஜலத்தைக் கண்டு பயமே இல்லை.

கொஞ்ச நாளைக்கு முன் எனக்கு 'இன்ஃப்ளூயன்ஸா' காய்ச்சல் வந்தது. 104 டிகிரி வரையில் போயிற்று. இரண்டு தடவைக்குப் பதில் தினம் மூன்று தடவை குளிர்ந்த ஜலத்தில் முழுகினேன். மருந்து எதுவும் சாப்பிடாமலே சுரம் குணமாயிற்று. அச்சமயத்தில் ஒரு நாள் ஸ்ரீமான் முதலியார் என்னைப் பார்க்க வந்தார். 'மூன்று தடவை போதாது, நாலைந்து தடவையாவது ஸ்நானம் செய்திருந்தால் இன்னும் சீக்கிரம் குணமாயிருக்கும்' என்றார்.

(1) சரியான உணவு அருந்துதல்;

(2) மலச்சிக்கல் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுதல்;

(3) அடிக்கடி குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்தல்.

இம் மூன்று முறைகளின் மூலம் மனிதன் கூடிய வரையில் நோயில்லாமல் வாழலாம் என்றும், நம் வசமில்லாத காரணங்களால் நோய் ஏற்பட்டாலும் மருந்தில்லாமலே குணப்படுத்திக் கொள்ளலாமென்றும் ஸ்ரீமான் முதலியார் சொல்கிறார். கம்பனுடைய கவிதையைப் பற்றிப் பேசுகையில் எவ்வளவு பரவசமடைகிறாரோ, குளிர்ந்த ஜல ஸ்நானத்தைப் பற்றிப் பேசும் போதும் ஏறக்குறைய அவ்வளவுக்கு அவர் மகிழ்ச்சி அடைவதைக் காணலாம்.

> **வீட்டிலுள்ள பெண் தெய்வங்களின் எதிர்ப்புக்கும் டாக்டர்களின் கோபத்துக்கும் தயாராயிருந்து கொண்டு அவர்கள் இதை ஆரம்பிக்க வேண்டும்!**

நேயர்களில் விருப்பமுள்ளவர்கள் இச் சிகிச்சை முறையைக் கைக்கொண்டு பயன் பெறலாமென்பதற்காகத்தான் இவ்வளவு தூரம் எழுதினேன். ஆனால், வீட்டிலுள்ள பெண் தெய்வங்களின் எதிர்ப்புக்கும் டாக்டர்களின் கோபத்துக்கும் தயாராயிருந்து கொண்டு அவர்கள் இதை ஆரம்பிக்க வேண்டும்.

"யார் அங்கே...? டாக்டர் சாரா? வாருங்கள், வாருங்கள். உடம்பு செளக்கியமாய் இருக்கிறது; ஏதாவது மிக்ஸ்சர் கொடுக்கிறீர்களா?"

- 'அதிர்ஷ்ட கவசம்'
வானதி வெளியீடு

# யார் அங்கே?






# அடடா... மாநகராட்சி!

மருத்துவ முகாம் நடத்துவதென்பதே மிகவும் சிரமமான விஷயம். டாக்டர்கள், மருத்துவ உதவியாளர்கள், வாகன ஓட்டுநர்கள் உட்பட எல்லோரது ஒத்துழைப்போடு, தேவையான அளவு மாத்திரைகள், மருந்துகளும் இருப்பில் இருக்க வேண்டும். எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு மக்கள் வராவிட்டால் என்ன ஆவது? எனவே முகாம் குறித்து பலமான விளம்பரம் செய்ய வேண்டும். இப்படி ஒரு மருத்துவ முகாமுக்கே 'உன்னைப் பிடி என்னைப் பிடி' என்கிற நிலையிருக்க, ஒரே நாளில் 155 வட்டங்களில் மருத்துவ முகாம் நடத்தி சாதனை புரிந்திருக்கிறது சென்னை மாநகராட்சி. இதன்மூலம் லிம்கா சாதனை புத்தகத்திலும் இடம் பிடித்திருக்கிறது. எப்படி இது சாத்தியமாயிற்று? சென்னை மேயர் சுப்பிரமணியத்தைக் கேட்டோம்.

''நான் முதல்முறையாக மேயர் பொறுப்பேற்றுக் கொண்ட சென்ற அக்டோபரில் நல்ல மழை! மழைக் காலத்தில் காய்ச்சல், இருமல், சளி எல்லாம் நம்மிடையே ஏக பிரசித்தம்.

இதைக் கருத்தில் கொண்டு உள்ளாட்சித் துறை அமைச்சர் மு.க.ஸ்டாலின் அவர்கள், 'மாநகராட்சி சிறப்பு மருத்துவ முகாம் நடத்தலாமே' என்று யோசனை சொன்னார். முதலில் மண்டல அளவில் ஒரு

முகாம் நடத்தவே நினைத்தோம். ஆனால், அமைச்சர் அவர்கள் 'எல்லா வட்டங்களிலும் ஒரே நாளில் நடத்தலாம்' என்றதோடு, எங்களுக்கு வேண்டிய எல்லா உதவிகளுக்கும் ஏற்பாடு செய்தார். இளைஞர் விழிப்புணர்வு இயக்கம், லயன், ரோட்டரி போன்ற தொண்டு நிறுவனங்களுடன் இணைந்து பன்னிரண்டு நாட்களில் கடந்த செப்டம்பர் 11-ஆம் தேதி வெற்றிகரமாக இந்த ஆரோக்கியத் திருவிழாவை நடத்தி முடித்தோம்'' என்றார் மேயர்.



155 இடங்களில் ஒரே நாளில் காலை ஏழு மணியிலிருந்து மாலை நான்கு மணி வரை முகாம்கள் நடத்தப்பட்டிருக்கின்றன. 500 டாக்டர்கள், உதவியாக 5200 மருத்துவப் பணியாளர்கள். 155 மருத்துவ முகாம்களில் பயனடைந்தோர் எண்ணிக்கை 60,478. முகாம்கள் நடந்துகொண்டிருக்கும் போதே லிம்கா புத்தக நிர்வாகிகள் எல்லா முகாம்களுக்கும் விஸிட் செய்தனராம்!

'சாதாரண காய்ச்சல் போன்றவற்றுக்கு மருந்து கொடுத்திருப்பீர்கள். ஆனால், இருதயக் கோளாறு, கிட்னி பிரச்னை உள்ளிட்ட நோயாளிகளுக்கு உடனே சிகிச்சை செய்திருக்க முடியாதே...' என்றால்,

''இப்படிப்பட்ட தீவிர நோயாளிகளின் பட்டியல் எடுக்கப்பட்டதில், 7600 பேர் இந் நோய்களால் பாதிக்கப்பட்டிருந்ததை அறிந்தோம். அவர்களைப் பொது மருத்துவமனைக்கு மேல் சிகிச்சைக்கு அனுப்பி வைத்தோம். சிகிச்சை பெற்றார்களா என்றும் கண்காணித்தோம்'' என்ற மேயர்,

''மலேரியா, காசநோய், சின்னம்மை ஆகியவற்றுக்கு மாநகராட்சி மருத்துவமனைகளில் சிறந்த மருந்துகள் கொடுக்கப்படுகின்றன'' என்றார்.

**இந்த முகாம் மூலம் லிம்கா சாதனை புத்தகத்தில் இடம் பிடித்திருக்கிறது சென்னை மாநகராட்சி**

சென்னை மாநகராட்சியில் மொத்தம் 93 மருந்தகங்கள் இருக்கின்றன. இவற்றைத் தவிர நடமாடும் மருந்தகங்கள் குடிசைப் பகுதிகளுக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன. இந்த வெற்றியைத் தொடர்ந்து, வரும் மழைக் காலத்தில் ஒரு வட்டத்துக்கு இரண்டு முகாம்கள் நடத்தும் யோசனையும் பரிசீலனையில் இருக்கிறதாம்.

''டெண்டர் நடைமுறைகளில் மிகவும் வெளிப்படையான அணுகுமுறைகள், தெருவிளக்குகள் எரிவதில் தீவிர கவனம், போக்குவரத்து நெருக்கடியைச் சமாளிக்கப் பாலங்கள் என்று மாநகராட்சியின் செயல்பாடுகள் சதாப்தி வேகத்தில் நடைபோடுகின்றன. தலைவர் கலைஞர், தளபதி ஸ்டாலின் வழிகாட்டுதலில் மேலும் பல சாதனைகள் செய்வோம்'' என்கிறார் மேயர் சுப்பிரமணியம்.

- ஸ்ரீநி

படம்: ஸ்ரீஹரி

# நண்பனின் காதலி



ஒரு பெண்... அவளைக் காதலிக்குற ரெண்டு வாலிபர்கள்னாலே சிக்கல் ஜாஸ்தி. அதிலும் அவங்க ரெண்டு பேரும் திக் ஃப்ரெண்ட்ஸ்னா கேக்கவே வேணாம். முட்டல் மோதல்ல தொடங்கி கட்டிப் பிடிச்சு சண்டை போடுற வரைக்கும் போயி அந்தப் பொண்ண அடையறதுக்குள்ள தாவு தீர்ந்துடும். இதுதான் நண்பனின் காதலி. குணாலும் விக்ரமாதித்யாவும் நண்பர்கள். அவங்களை காலி பண்ற பெண்ணா ஷிவானி சிங்.

நண்பர்கள் ரெண்டு பேரும் கொடுத்த வேலையைக் கச்சிதமா செஞ்சிருக்காங்க. போட்டி, பொறாமை, நட்புன்னு பொங்கிப் பிரவகிக்குற உணர்வுகள நல்லா வெளிப்படுத்தி இருக்காங்க. பரிதாபமா தெரியறது ஷிவானிதான். கவர்ச்சி காட்டியே காலத்தை ஓட்டுறது சினிமாவுல முடியாது அம்மணி.

சுவாரஸ்யமா கதையை யோசிச்ச டைரக்டர் கிச்சா, கொஞ்சம் சுறுசுறுப்பாவும் சொல்லியிருக்கலாம். அங்கங்கே படம் தொய்வடைஞ்சா மாதிரி ஃபீலிங். தேவாவின் பாடல்கள் 'பரவாயில்லை ரகம்'. சங்கரின் ஒளிப்பதிவில் குளுமை ஜாஸ்தி.

நண்பர்கள் கதையில் கோணம் புதுசு. ஆனா ட்ரீட்மெண்ட் பழசு!

# முருகா

வழக்கமான காதல் + மோதல் கதைதான். சொல்லப்பட்ட விதத்திலும் புதுசா எதுவும் இல்ல. பெரும்புள்ளி பொண்ணு ஸ்ருதிஷர்மா மேல கண்ணு போடுற அஷோக், பரம ஏழை. ஆனா, நல்ல துடிப்புள்ள படிப்பாளி. ஏழை எதுக்குமே ஆசைப்படக் கூடாது. காதலுக்கு மட்டும் எப்படி? ராமேஸ்வரத்துல இருந்து சென்னைக்கு ஊர் கடத்தப்படறார். மழை விட்டும் தூவானம் விடாத கதையா, இங்கும் ஸ்ருதி வர, இரும்பவும் துளிர்க்குது... எது? காதல்தான்! அப்புறம் அடிதடி, பிரிவு, கடைசில வழக்கம்போல சுபம்.

அஷோக் பார்க்க நல்லாருக்கார். நல்ல படங்களா பார்த்துப் பண்ணுங்க சார். ஸ்ருதி, ஸ்ருதியே இல்லாம நடிச்சிருக்கார். பழைய நெடியடிக்கிற கதைய செலக்ட் பண்ணினதில்லாம, காட்சிகள்லயும் புதுமை இல்லாம பார்த்துக்கிட்டிருக்காரு டைரக்டர். வடிவேலு காமெடி போர்ஷன் கொஞ்சம் உருப்படியா வந்திருக்கு. பாடல்கள் ஒன்னு, ரெண்டு தேறுது. பின்னணி விக். ராமேஸ்வரக் காட்சிகள் கண்ணுக்கு நிறைவா இருக்கு.

முருகான்ற பவர்ஃபுல் தலைப்புக்கு ஏத்த மாதிரி ஃபவர்புல்லா வந்திருக்க வேண்டிய படம்... ம்... எங்கயோ மிஸ்ஸாயிடுச்சு.

- லஜ்ஜாவதி



# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

+16

8-4-07 இதழுடன்
இணைப்பு... 16 பக்கங்கள்

# உரிமைக்குரல்!

நுகர்வோர் விழிப்புணர்வு

நாம் அறிந்து கொள்ள
வேண்டிய தகவல்கள்

உஷார் TV



''1986ஆம் வருடம் நிறைவேற்றப்பட்ட நுகர்வோர் பாதுகாப்புச் சட்டத்தின்படி நுகர்வோர் நீதிமன்றங்கள், அமைக்கப்பட்டன. மாவட்ட அளவிலும், மாநில அளவிலும் இருக்கும் இந்த நீதிமன்றங்களில் துவக்கம் முதல் இன்றுவரை ஒரு லட்சம் வழக்குகள் நுகர்வோர்களால் போடப்பட்டிருக்கின்றன. விழிப்புணர்வு அதிகமாவதற்கு தமிழக அரசின் நடவடிக்கைகளும் ஒரு காரணம்'' - உணவு மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத்துறை அமைச்சர் எ.வ.வேலு.

**ஒரு லட்சம் வழக்குகள்**

# நுகர்வோரே எஜமானர்கள்!

## –அமைச்சர் வேலு பேட்டி

**தாக்கல் செய்யப்பட்டதாகச் சொல்கிறீர்கள். நிலுவையில் உள்ள வழக்குகள் எத்தனை?**

''விசாரணை நாளிலிருந்து 90 நாட்களுக்குள் வழக்கை முடிக்க வேண்டும். டிசம்பர் 2006-ல் சுமார் 7000 வழக்குகளே நிலுவையில் இருந்தன.

**எப்படிப்பட்ட வழக்குகள் இந்த நீதிமன்றங்களுக்கு வருகின்றன?**



"மக்கள் அன்றாட வாழ்க்கைக்கு வாங்குகின்ற பொருட்களின் தரம், தன்மை, எடை, பயன் போன்றவை உறுதியளித்தபடி இல்லாமல், நுகர்வோரின் விருப்பத்துக்கு மாறாக இருந்தால்; அல்லது உடலுக்குத் தீங்கு, பண நஷ்டம் ஏற்பட்டால்; கலப்படமாக இருந்தால் நுகர்வோர் நீதிமன்றத்துக்குச் சென்று நிவாரணம் பெறலாம். நஷ்ட ஈடு 20 லட்சம் வரை கேட்பது என்றால் மாவட்ட நீதிமன்றங்களை அணுக வேண்டும். 20 லட்சத்துக்கு மேல் ஒரு கோடி வரை என்றால் மாநில நுகர்வோர் ஆணையத்தை அணுக வேண்டும். பொதுவாக வீட்டு உபயோகப் பொருட்கள் குறித்த வழக்குகள் நிறைய வரும். அப்புறம் உணவுப் பொருட்கள், அரசு வேலைகளில் குறைகள், மருத்துவமனைகளின் அலட்சியங்கள், செல்ஃபோன், கிரெடிட் கார்டு நிறுவனங்களின் செயல்பாடுகள் குறித்த வழக்குகள் நிறையவே வருகின்றன.

**தமிழக அரசின் நுகர்வோர் பாதுகாப்புத் துறை செய்யும் பணிகள்தான் என்னென்ன?**

"நீதிமன்றத்தின் செயல்பாடுகள் ஒரு பக்கம் இருக்க, கலைஞர் அரசு கவனம் செலுத்துவது நுகர்வோர்களின் விழிப்புணர்வு குறித்துத்தான்; அச்சு, தொலைக்காட்சி, பண்பலை, ஊடகங்கள் மற்றும் தெரு நாடகங்கள், கருத்தரங்குகள் மூலமாக விழிப்புணர்வுப் பிரசாரம் நடத்துகிறோம். 'தமிழ்நாடு நுகர்வோர் கவசம்' என்ற இதழ் வெளியிடுகிறோம். பள்ளிகளில் நுகர்வோர் மன்றங்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. இதற்கு மாநில அரசு நிதி உதவி செய்யப்படுகிறது.

**ரேஷன் பொருட்கள் தரக்குறைவாக அல்லது எடை குறைவாக இருந்தால் என்ன செய்ய வேண்டும்?**

"இதற்கான புகார்ப் பிரிவு எனது அலுவலகத்தில் இயங்குகிறது. தொலைபேசி அல்லது தொலைநகல் (044-25670204) மூலமாகப் புகார் செய்யலாம். நாற்பத்தெட்டு மணி நேரத்தில் தகுந்த நடவடிக்கை எடுத்து, உரியவர்களுக்குத் தகவல் கொடுக்கப்படும். நுகர்வோர்களே எஜமானர்கள் என்ற கருத்தாக்கத்தோடு தமிழக அரசு செயல்படுகிறது. ○

உஷாருங்கோ...

உணவுக் கலப்படத் தடுப்பு சட்டம் - 1954 சொல்கிறது, உணவுப் பொருட்களில் என்ன என்ன கலப்படம் செய்கிறார்கள்?
- அடுத்த சில விநாடிகளில்...

உஷார் TV



# நுகர்வோர்



இந்தியாவில் 1986-ல் நுகர்வோர் பாதுகாப்புச் சட்டம் உருவாக்கப்பட்டு, நுகர்வோர் நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டன.

“நுகர்வோர் நீதிமன்றங்கள் உருவாக்கப்பட்டபோது, பல்வேறு துறைகள் அந்த அதிகார வரம்புக்குள் தாங்கள் வரமாட்டோம்'' என்று நழுவப் பார்த்தார்கள். ஆனால், பல்வேறு உயர்நீதி மன்றங்களும், உச்சநீதி மன்றமும், நுகர்வோர் நீதிமன்றத்துக்கு மென்மேலும் பலத்தைக் கொடுத்து தனியார், அரசு என்று எல்லாத் துறைகளையும் அதன் வரம்புக்குள் கொண்டு வந்து விட்டன'' என்கிறார்கள் நுகர்வோர் கோர்ட்டில் ஆஜராகும் வழக்கறிஞர்கள்.

“நமது நாட்டில் இன்னும் முழு விழிப்புணர்வு வரவில்லை. பேருந்தில் 128 செ.மீ. வரை உயரம் இருந்தால்தான் அரை டிக்கெட்



# ஆண்டு முழுதும் ஆடிதான்!

“எங்கள் சேல்ஸ்மேன் எந்த கஸ்டமரிடமாவது உரசினால் அவருக்கு அடுத்த நிமிடமே சீட்டுக் கிழித்து செட்டில் செய்து அனுப்பி விடுவோம். பெரும்பாலும் அவர்கள் மிக நல்ல முறையிலேயே கஸ்டமர்களை அணுகுவார்கள். காரணம் சம்பளத்தைத் தவிர, விற்பனைக்கு ஏற்றபடி ஊக்கத் தொகையும் உண்டு'' என்று சொல்கிறார் பிரம்மாண்டமான துணிக் கடை ஷோ ரூம்களுக்கு உரிமையாளரான ஸ்ரீ கிருஷ்ணா கலெக்ஷன்ஸ் அதிபர் லட்சுமி நாராயண் பிசானி. 1990-களில் வெறும் 1500 சதுர அடி அளவில் ஷோ ரூமைத் துவக்கிய இவர்களுக்கு இன்று சென்னை, பங்களூரு, கோவை, புனே, ஹைதராபாத் ஆகிய இடங்களில் மொத்தமாக ஐந்து லட்சம் சதுர அடிகளில் ஷோ ரூம்கள் இருக்கின்றன.

“வரும் கஸ்டமர்களுக்கு நிறைய ரகங்களை எடுத்துக் காட்டணும். அதே



# நீதிமன்றம்

என்பது சட்டம். ஆனால் உயரம் எவ்வளவு இருந்தாலும், ஐந்தாவது படிப்பவர் என்றால், உரிய சான்றிதழ் வைத்திருந்தால், அவருக்கு அரை டிக்கெட்தான். இது எவ்வளவு பேருக் குத் தெரியும்? இன்னமும் நிலப் பதிவாளர், அலுவலகச் செயல்பாடு கள் - குறிப்பாக வில்லங்கச் சான்றிதழ் கொடுப்பது- இவையெல்லாம் இன்னும் நீதிமன்றத்தின் வரம் புக்குள் வரவில்லை. இது தொடர்பான வழக்கு உச்சநீதி மன்றத்தில் நிலு வையில் இருக்கிறது. அந்தத் தீர்ப்பு வந்தவுடன் மேலும் அதிகாரம் கூடும்.

"நுகர்வோர் நீதிமன்றத் தின் தீர்ப்புக்கு ஒருவர் கட் டுப் படவில்லை என்றால், அபராதம் மட்டுமல்ல, ஆளையே மூன்று வருடம் உள்ளே தள்ளும் அதிகாரம் நீதிமன்றத் துக்கு உண்டு. ஒருமுறை திருநெல்வேலி மாவட்ட ஆட்சியர் நீதிமன்றத் தீர்ப்பை அமுல் படுத்தத் தவறிவிட்டார். அவரைக் கைது செய்ய சொல்லி விட்டார்கள். பதறியடித்த ஆட்சியாளர் உடனே

---

சமயம் அது அவர்கள் பர்ஸுக்குப் பொருந்தி வருவதாகவும் இருக்க வேண்டும்'' என்கிறார் பிசானி.

இந்தியா முழுக்க அலைந்து தரமான சரக்குகளையே நேரடியாகக் கொள்முதல் செய்கிறார்கள் இவர்கள். எனவே குறைகள் என்பது மிகக் குறைவுதானாம். வாங்கிய துணி வகைகள் பிடிக்கவில்லை என்றால் மூன்று நாட்களுக்குள் பில்லுடன் வந்தால் மாற்றிக் கொடுத்து விடுகிறார்கள். அதுபோல் ரெடிமேட் ஆடைகள் வாங்கும்போது சிறிய அளவிலான மாறுதல்களையும் உடனே செய்து கொடுக்கிறார்கள்.

"ஆடித் தள்ளுபடியில் நிறைய வியாபாரம் ஆகிறது என்பது சந்தோஷம்தான். ஆனால் எங்களைப் பொருத்த அளவில் வருடத்தில் எப்போதும் பத்து சதம் தள்ளுபடி உண்டு. தவிர, வெளிநாடு செல்லும் வாய்ப்புடன் பல பரிசுத் திட்டங்களும் உண்டு.

பங்கு வியாபாரத்தில் கவனம் செலுத்தி பல பாரம்பரியத் துணிக் கடைகளை பயமுறுத்த இருக்கிறார்கள் இவர்கள். ○





சட்டம்



• அமெரிக்காவைத் தொடர்ந்து வளர்ந்த நாடுகளில் நுகர்வோர் பாதுகாப்புச் சட்டங்கள் கொண்டு வரப்பட்டாலும், ஆசிய நாடுகளில் இந்த விஷயத்தில் வேகம் இல்லை.

• நுகர்வோர் பாதுகாப்பு குறித்த விழிப்புணர்வு 1960-களில்தான் அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகளில் உருவானது.

• முதலில் நெதர்லாந்து, கனடா, ஆஸ்திரேலியா, இங்கிலாந்து மற்றும் அமெரிக்காவில் நுகர்வோர் குழுக்கள் உருவாக்கப்பட்டன.

• பின்னர் அந்தக் குழுக்கள் ஒருங்கிணைக்கப்பட்டு சர்வதேச நுகர்வோர் பாதுகாப்புக் கூட்டமைப்பு உருவாக்கப்பட்டது.

• அமெரிக்க ஜனாதிபதி கென்னடி உலகிலேயே முதன் முதலாக 'நுகர்வோர் பாதுகாப்புச் சட்டத்தை 1963 மார்ச் 15-ஆம் தேதி கொண்டு வந்தார். எனவே தான் உலகமெங்கும் மார்ச் 15-ஐ நுகர்வோர் தினமாக அனுசரிக்கிறார்கள்.

• எனவே 1985-ல் ஐக்கிய நாடுகள் பொதுச் சபை "வளரும் நாடுகள் நுகர்வோர்கள் பாதுகாப்பு குறித்து உடனடியாக சட்டம் போட வேண்டும்" என்று தீர்மானம் போட்டது.

தீர்ப்பை அமுல்படுத்தினார். மாவட்ட நீதிமன்றத்தில் தீர்ப்பை எதிர்த்து ஒருவர் மாநில ஆணையத்தில் அப்பீல் மனு செய்ய வேண்டுமென்றால் நஷ்ட ஈட்டுத்தொகையை வங்கியில் டெபாஸிட் செய்ய வேண்டும். இதன் மூலம் வழக்கில் ஜெயித்தவருக்கு நஷ்டஈடு கிடைப்பது குறித்து நம்பிக்கை உண்டாயிற்று. அப்பீலில் தோற்றால் வங்கி டெபாஸிட் தொகை அப்படியே ஜெயித்தவருக்குப் போய் விடும். 20 லட்சம் நஷ்டஈடு கேட்பதற்கு மாவட்ட நீதிமன்றத்தையும் அதன் பிறகு ஒரு கோடி வரை மாநில ஆணையத்தையும், அதையும் தாண்டினால் தேசிய நுகர்வோர் ஆணையத்தையும் அணுக வேண்டும். பல விவகாரங்களில் நுகர்வோர் நீதிமன்றங்களுக்கு வானளாவிய அதிகாரம் இருக்கிறது. நுகர்வோர்கள் அதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்" என்கிறார்கள் வழக்கறிஞர்கள். ○





# ஹால்மார்க் பாஸ்மார்க்!

**"எங்க குடும்பத்தில் திருமணத்துக்கு நகை வாங்க வேண்டுமானால், நாங்கள் பர்சேஸ் செய்வது ஒரிஜினல் கேரளா ஜுவல்லரிஸ்லதான்" என்று சொல்கிறார் செல்வராசன்.**

1933ல் இருந்து நகை வியாபாரத்தில இருக்கும் கேரளா ஜுவல்லரிஸ் கடைக்கு செல்வராசன் போன்று நூற்றுக்கணக்கில் கஸ்டமர்கள் இருக்கிறார்கள்.

• செல்வராஜ் குடும்பம்...





"மக்கள் குழப்பமடையத் தேவையில்லை. தரமான ஷோரூமில், 'ஹால்மார்க்' முத்திரை போடப்பட்ட நகைகளை வாங்கினால் போதும்" என்று சொல்கிறார் ஒரிஜினல் கேரளா ஜுவல்லரீஸ் அதிபர் பாபு இமானுவேல்.

**அது என்ன ஹால்மார்க்?**

"கடையில் விற்கப்படும் எல்லா நகையும் 22 காரட்தான் என்றும் நகையில் **91.66** சதம் தங்கமும், மீதம் செம்பு போன்ற உலோகங்களும் இருக்கின்றன என்பதைச் சொல்லும் இந்திய தர நிர்ணய தரத்தின் முத்திரைகள் ஹால்மார்க். தரநிர்ணயக் கழகத்தில் ஒரு நகைக் கடைக்காரர் தம்மைப் பதிவு செய்துகொண்டவுடன், கடையிலிருக்கும் பொருள்களின் தரத்தைச் சோதித்து ஹால்மார்க் முத்திரை போடும் அதிகாரம் தரநிர்ணயக் கழகத்துக்கு வந்துவிடுகிறது. தரத்தில் ஏதாவது சந்தேகம் இருந்தால் அதற்குப் பதில் சொல்லும் பொறுப்பு இந்திய அரசுக்குத்தான்.

"கஸ்டமர்களே பெரிய செக்கிங் இன்ஸ்பெக்டர்கள்தான். பல பேரிடம் விசாரித்துத்தான் கடைக்கு வருகிறார்கள்.

சில சமயங்களில் மிக நுட்பமான இணைப்புடன் கூடிய நகைகளை வாங்குபவர்களுள் சிலர் ஓரிரு நாட்கள், வாரங்கள் கழித்து அறுந்துவிட்டது என்று ஒரு சிலர் தங்களுடைய அஜாக்கிரதையால் அறுந்துவிட்டது என்று வருவார்கள். நாங்கள் புரிந்துகொண்டு சரி செய்து கொடுப்போம்.

மதிப்புக் கூட்டு வரி அமுலுக்கு வந்துவிட்டதால் செய்கூலி, சேதாரம் இல்லை என்றெல்லாம் சொல்லி கஸ்டமர்களை இழுக்கும் தந்திரம் இனி எடுபடாது."



# அட... இப்படியும் நடக்

''நுகர்வோர்கள்' ஒவ்வொரு பொருளை வாங்குவதிலும் ஏமாற்றப்படுகிறார்கள்'' என்கிறார் தமிழ்நாடு நுகர்வோர் கூட்டமைப்பின் தலைவரும் தேசிய நுகர்வோர் கூட்டமைப்பின் துணைத் தலைவருமான துரைசிங்கம். அவர் கொடுக்கும் பட்டியலைப் பார்த்ததும் நமக்கு மயக்கம் வராத குறைதான்.



* பற்பசை டியூபின் ஓட்டையை இன்னும் சிறியதாக வைத்தால், வீணாகாமல் தேவைக்கேற்றபடி எடுத்துக்கொள்ள முடியும். ஆனால் நுகர்வோர் அதை நிறைய பயன்படுத்தி விரைந்து முடித்தால்தானே அடுத்த டியூப் வாங்குவார்கள். எனவே தேவைக்கு அதிகமாகவே அந்த ஓட்டையை வைத்திருக்கிறார்கள்.

* டெலிஃபோன் பல்ஸ் ரேட்! அது பி.எஸ்.என்.எல். ஆகட்டும், தனியார் தொலைபேசி / செல்பேசி ஆகட்டும். மூன்று நிமிடங்கள், இரண்டு நிமிடங்கள் என்பதெல்லாம் சுத்த ஏமாத்தல்!



* மதுரையிலிருந்து 15 கி.மீ. தொலைவில் சுத்தப் பட்டிக்காடாய் இருந்தாலும், அதற்கு நகர்ப்புறக் கட்டணம் வசூலிக்கிறது பி.எஸ்.என்.எல்.. கேட்டால் மதுரை எக்ஸ்சேஞ்ச் என்கிறார்கள். எல்லாப் பகுதிகளுமே அருகாமையில் உள்ள டவுன் பகுதியுடன் இணைந்திருக்கும் போது 'கிராமப்புறக் கட்டணம்' என்ற ஒன்றை வைத்து ஏமாற்றுவது ஏன்?

* எடைகள் எல்லாம் ஏமாற்று வேலை. கோயமுத்தூரில் 800 கிராம் எடைக்கல் செய்து, அதில் ஒரு கிலோ என்று போட்டுக் கொடுக்கிறார்கள். இதை சோதனை செய்யும் பொறுப்பிலிருக்கும் அதிகாரியோ தன் பாக்கெட் எடையை அதிகரிப்பதில் கவனமாக இருப்பதால் கடையில் உள்ள எடைக்கல்லைப் பற்றிக் கவலைப்படுவதில்லை.

* பொங்கல், பண்டிகை நாட்களில் கோயம்பேடு ஆம்னி பஸ் ஸ்டாண்டில் திருச்சிக்கும்







மதுரைக்கும் இரண்டு மடங்கு கட்டணம் வாங்குகிறார்கள்.

* மருத்துவமனையில் நுகர்வோர் படும் பாடு அதிகம். தேவையில்லாமல் சிசரியன் அறுவை சிகிச்சை, போலிமருந்துகள், தவறான சிகிச்சை என்று எங்களுக்கு நிறையவே புகார்கள் வருகின்றன.

* ஆடித் தள்ளுபடி! இதுபற்றி விரிவாக சர்வே செய்து நாங்கள் கண்டுபிடித்தது என்னவென்றால் உற்பத்தி விலைக்கு லாபம் ஏற்றி, அத்துடன் பத்து இருபது சதம் அதிகமாக வைத்துத்தான் தள்ளுபடி விலை நிர்ணயிக்கிறார்கள். ஆனால் நமது அப்பாவி ஜனங்கள் விவரம் தெரியாமல் அலை மோதுகிறார்கள். தவிர, உற்பத்தியில் சிறு, சிறு குறைபாடுகள் இருக்கும் சரக்குகளையும் தள்ளிவிடுகிறார்கள்.

* அதே போல் தங்கம்! இதுபற்றியும் நாங்கள் கள ஆய்வு செய திருக்கிறோம். 22 காரட் ஒரு போதும் இருக்காது. 16 அல்லது 18தான் இருக்கும். அட்சய திருத்தியை அன்று, வோல்சேலாக ஏமாற்றப்படுகிறோம்.

* விவசாயிகள் வாங்கும் விதையிலும் கலப்படம். உரத்திலும் கலப்படம். பூச்சி மருந்திலும் கலப்படம்.

* பழைய தொலைக்காட்சியின் பாகங்களைக் கொண்டு புது தொலைக்காட்சி என்று செய்து நமது தலையில் கட்டி விடுகிறார்கள். மிக்ஸி, வாஷிங்மிஷின் ஆகியவற்றிலும் இதே கதைதான். கணினியைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை.

* இந்த ஏமாற்று வேலைகளிலிருந்து ஓரளவு தப்பிக்க வேண்டுமென்றால் அங்கீகரிக்கப் பட்ட ஷோ ரூம், மற்றும் கடைகளில், தரமான கம்பெனி தயாரிப்புகளை வாங்குங்கள். எந்தப் பொருளை வாங்கும்போதும் வரிக்குப் பயந்து கொண்டு பில் வாங்காமல் இருக்காதீர்கள். பில் முக்கியம், கியாரண்டி, வாரண்டி இருக்கிறதா என்றும் பார்த்துக்கொள்ளவும். ○

**உஷாருங்கோ...**

துவரம் பருப்பில் கேசரி பருப்பினைக் கலப்படம் செய்கிறார்கள். கலர் வேறுபாட்டை வைத்துக் கண்டுபிடித்து விடலாம்.

உஷார் TV



குமாரி ஜெ.ரஞ்சனிதேவி (நுகர்வோர் வழக்குகளில் ஆஜராகும் வழக்கறிஞர்)

திரு. மனோபாரதி (பத்திரிகையாளர்)

திருமதி. தீபா (குடும்பத் தலைவி)

திரு. மங்கல்ராஜ் (மாநகராட்சி உறுப்பினர் மற்றும் வர்த்தகர்)

நால்வரும் நுகர்வோர்கள் எப்படி ஏமாற்றப்படுகிறார்கள், அதற்கானத் தீர்வு என்ன என்பது குறித்து உரையாடினார்கள். அதிலிருந்து...



• மங்கல்ராஜ்

# நுகர்வோர்

**தீபா**: நான்கைந்து வருடங்களுக்கு முன்பு டி.வி. வாங்கினோம். வாங்கிய அடுத்த நாளிலிருந்து பிரச்னைதான். ஒலி இருந்தால் ஒளி இருக்காது; ஒளி இருந்தால் ஒலி இருக்காது. பல தடவை மெக்கானிக் வந்து சரி செய்தும் ஒரு பயனுமில்லை. கடைசியில் வெறுத்துப் போய் வேற டி.வி. வாங்கிட்டோம்.

**ரஞ்சனிதேவி**: நீங்க இங்கதான் தப்பு பண்றீங்க, கியாரண்டி கால கட்டத்துக்குள் இருந்தால் பொருளையே மாற்றிக் கொள்ளலாமே!

**மனோபாரதி**: முதலில் கியாரண்டி, வாரண்டி பற்றி சொல்லுங்கள்.

**ரஞ்சனி தேவி**: ஒவ்வொரு பொருள் வாங்கும்போதும்- குறிப்பாக, வீட்டு உபயோகப் பொருட்கள்- அவற்றுக்கு கியாரண்டி, வாரண்டி இருக்கிறதா என்று பார்த்து வாங்க வேண்டும். வாரண்டி காலகட்டம் என்றால், அதற்குள் வாங்கிய பொருட்களில் உள்ள பாகங்கள் ஏதாவது பழுது இருப்பின், அந்த பாகத்தையே இல

• ஜெ.ரஞ்சனிதேவி





வசமாக மாற்றி கொடுக்க வேண்டும். வேறு ஏதாவது குறைகள் இருப்பின் சரி செய்து தர வேண்டும். கியாரண்டி கால கட்டத்தில், தீர்வு காண முடியாத, உற்பத்தி மட்டத்திலேயே பழுது உண்டாகியிருந்தால், பொருளையே மாற்றிக் கொடுக்க வேண்டும்.

**மங்கல்ராஜ்:** முதலில் நுகர்வோருக்கு விழிப் புணர்வு தேவை. பலர் வரி போட்டு விடுவார் களே என்று பயந்து பில் வேண்டாம் என்கிறார் கள். இது தவறான போக்கு.

**மனோபாரதி:** தி.நகரில் உள்ள ஒரு பெரிய கடையில் பில்லுக்குப் பதிலாக எஸ்டிமேட் என்று போட்டுத் தருகிறார்கள். இது சரியா?

**ரஞ்சனி தேவி:** அவர்கள் மக்களை மட்டுமல் லாது அரசையும் ஏமாற்றுகிறார்கள். கண்டிப்பாக பில்லைக் கேட்டு வாங்க வேண்டும். உணவுப் பொருள், மருந்துகள் போன்றவற்றை வாங்கும் போது எக்ஸ்பயரி தேதி பார்த்து வாங்க வேண் டும். வரிக்கு பயந்து கொண்டு பில்லை மறுக் கக்கூடாது.

**தீபா:** பல சூப்பர் மார்க்கெட்டுகளில்


• தீபா

# ஏமாளிகளா?

எக்ஸ்பயரி முடிந்து போன பொருட்களை அலமாரியில் தொடர்ந்து வைத்திருக்கிறார்கள். அவ்வப்போது சோதனை செய்து அவற்றை அப்புறப் படுத்த லாமே!

**மனோபாரதி:** கடையில் வாங்குகிற பொருட்களுக்கு மட்டும்தான் என்றில்லாமல் நுகர்வோர் வேறு பல விஷயங்களிலும் உஷாராக இருக்க வேண்டியிருக்கிறது. குறிப்பாக அரசு மற்றும் தனியார் சேவைத் துறைகள்.

**ரஞ்சனி தேவி** : சரியாகச் சொன் னீங்க. உதாரணமாக வங்கிச் சேவை, தபால் சேவை, தொலைபேசிச் சேவை, காப்பீடு சேவை, ரயில்வே, பேருந்து, ஆகிய சேவைத் துறைகளில்











• மனோபாரதி

நுகர்வோருக்கு ஏதேனும் பாதிப்போ, நஷ்டமோ ஏற்பட்டால் நுகர்வோர் நீதி மன்றத்துக்குப் போக முடியும்.

**தீபா:** ஒரு எமர்ஜென்ஸி விளக்கு வாங்கினேன். சரியில்லை. மாற்றிக் கொடுத்தார்கள். அதுவும் சரியில்லை. மீண்டும் மாற்ற முடியாது என்று சொல்லிவிட்டார்கள். இது போன்ற பிரச்னையில் அடுத்து என்ன செய்வது?

**ரஞ்சனி தேவி:** நாணயமற்ற வியாபாரம் நடத்துவதாக அந்த நிறுவனத்தின் மீது வழக்குப் போடலாம்.

**மங்கல்ராஜ்:** இந்த கிரெடிட் கார்டு விவகாரம்... கடனை வசூலிக்க அடியாட்களை அனுப்புவது சரிதானா?

**ரஞ்சனிதேவி:** சுப்ரீம் கோர்ட்டே இது போன்று செய்யக் கூடாது என்று சொல்லியிருக்கிறது. கடனைத் திருப்பித் தரவில்லையென்றால் நீதி மன்றத்தின் மூலம்தான் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

**தீபா:** இந்த ஆடித் தள்ளுபடி என்று ஆண்டுதோறும் அல்லாடுகிறதே! இதில் எந்த அளவுக்கு நுகர்வோர்கள் லாபம் அடைகிறார்கள்; அல்லது ஏமாற்றப்படுகிறார்கள்.

**தீபா:** லாபமில்லை, ஏமாற்றம்தான். நாமதான் விழிப்பா இருக்கணும்.

**மங்கல்ராஜ்:** நுகர்வோர் நீதிமன்றத்துக்கு போனால் விரைவில் நிவாரணம் கிடைக்குமா?

**ரஞ்சனி தேவி:** மனுதாரர் புகாரைப் பதிவு செய்து நாற்பத்தைந்து நாட்களுக்குள், பிரதிவாதி பதில் மனு தாக்கல் செய்ய வேண்டும். சட்டப்படி மூன்று மாதத்துக்குள் வழக்கைத் தீர்மானிக்க வேண்டும். இருந்தும் சில வழக்குகளில் பிரதிவாதி பதில் மனு தாக்கல் செய்யாத நிலையில், அல்லது ஆஜராகாத நிலையில், தீர்ப்பு விரைந்து சொல்லப்படுவதும் உண்டு.

**தீபா:** அதேபோல் 'ஒன்று வாங்கினால் ஒன்று இலவசம்' என்று பிரமாதமாக விளம்பரம் செய்துவிட்டு, 100 கிராம் பற்பசை டியூபுடன் இலவசமாக 25 கிராம் டியூபைக் கொடுப்பது ஏமாற்று வேலை இல்லையா?

**ரஞ்சனிதேவி:** ஏமாறுவோர் இருக்கும்வரை ஏமாற்றுவோர் இருப்பார்கள் என்பதுதான் உண்மை. நாம்தான் விழிப்புடன் இருக்க வேண்டும். ஏமாற்றப்பட்டால் நீதிமன்றம் போகத் தயங்கக் கூடாது. தரமான பொருட்களைத் தரமான இடங்களில் வாங்க வேண்டும். தரமான சேவையை ஊக்குவிக்க வேண்டும். ○

**உஷாருங்கோ...**










"யு.எஸ்ஸில் இருக்கிற உங்க மருமகளுக்கு ஆசையாக ஊறுகாயைக் கொண்டு போகும்போது ஏர்போர்ட்டுலயே எடுத்து வைச்சிருப்பாங்களே... அதில் பாக்டீரியாக்கள் இருக்குன்னு காரணம் சொல்லியிருப்பாங்க. ஆச்சி மசாலாவில இந்த மாதிரி எந்த பாக்டீரியாக்களும் கிடையாது. காரணம் எங்களோட எல்லாத் தயாரிப்புப் பொருட்களையும் அதிக பட்ச மற்றும் குறைந்த பட்ச வெப்பநிலைகளுக்கு உட்படுத்துவதால் பொருட்கள் கெட்டுப் போவதில்லை. எக்ஸ்பயரி டேட்டைப் பொருத்தவரைக்கும் நாங்கள் புதிதாகத் தயாரிக்கிற பொருட்களை எங்கள் ஆய்வுக்கூடத்திலேயே அதன் தன்மையைப் பார்ப்பதற்காக ஒரு வருடம் வரை வைத்திருப்போம். பின்புதான் மார்க்கெட்டில் 6 - 8 மாதங்களுக்கு எக்ஸ்பயரி கொடுத்து விற்பனை செய்கின்றோம். ஆச்சி மசாலாவில் செயற்கை ப்ரிசர்வேட்டிவ்களைப் பயன்படுத்துவதில்லை.

# கஸ்டமரே வழிகாட்டி!



நாங்கள் உலகின் பல நாடுகளுக்கு எங்கள் தயாரிப்புகளை ஏற்றுமதி செய்கிறோம். சர்வதேச ஸ்டேண்டர்டுகளை நாங்கள் பின்பற்றுவதால், இதுவரை ஆச்சி மசாலாவின் எந்தத் தயாரிப்பும் ரிஜெக்ட் ஆனதில்லை. எங்களுக்கு கஸ்டமரே வழி காட்டி என்பதால் அவர்களுக்குத் தரமானப் பொருட்களைக் கொடுப்பது மட்டுமே எங்கள் நோக்கம்" என்கிறார் ஆச்சி மசாலா நிறுவனர் பத்மசிங் ஐசக்.



''பாமரர்களும் நுகர்வோர் நீதிமன்றத்தை அணுகி, பயன்பெறும் வகையில் விழிப்புணர்வு பெருக வேண்டும். வழக்குகளைப் பதிவு செய்ய நீதிமன்றக் கட்டணம்கூட கிடையாது'' என்றார் நுகர்வோர் நீதிமன்ற வட்டாரங்களில் புகழ்பெற்று விளங்கும் வழக்கறிஞர் பழநிவேலாயுதம். தாம் ஜெயித்த வழக்குகளில் இரண்டை குறிப்பிட்டார் அவர்.




# வந்தார்கள்;

''சென்ற வருடம் ஒரு நாள். என் அலுவலகத்தில் அமர்ந்து தபால்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ராமநாதபுரத்திலிருந்து ஒரு போஸ்ட் கார்டு. "ஐயா... நான் என் வாழ்நாள் சேமிப்பான ஒரு லட்சம் ரூபாயை ஒரு நிதி நிறுவனத்தில் டெபாஸிட் செய்திருந்தேன். அந்த நிறுவனம் எனக்கு ஒழுங்காக வட்டி கொடுக்காதது மட்டுமல்லாமல், குறிப்பிட்ட காலம் முடிந்த பிறகும், டெபாஸிட் தொகையைத் திருப்பித் தராமல் இழுத்தடிக்கிறது. நீங்கள்தான் உதவ வேண்டும்'' என்று எழுதியிருந்தார் ஒருவர். "என் வயது 85. நான் சென்னைக்கு வந்து வழக்காட முடியாத நிலையிலிருக்கிறேன்'' என்றும் குறிப்பிட்டிருந்தார்.

'இவருக்குக் கண்டிப்பாக உதவ வேண்டும்' என்ற எண்ணம் எனக்குள் எழவே, உடனே அவருடன் தபாலில் தொடர்பு கொண்டு சம்பந்தப்பட்ட பேப்பர்களைத் தபாலில் அனுப்பச் சொன்னேன். அனுப்பினார். மாநில நுகர்வோர் ஆணையத்தில் வழக்குப் பதிவு செய்தோம். குறிப்பிட்ட அந்த நிதி நிறுவனம் பல வாய்தாக்களை வாங்கி இழுத்தடித்துக் கடைசியில் "பணத்தை உடனே தர வேண்டும்'' என்றும் தீர்ப்பும் வழங்கப்பட்டது. ஆனால் நிதி நிறுவனம் தீர்ப்பை அமுல்படுத்தாமல் தாமதம் செய்தது. நான் மறுபடியும் நீதிமன்றத்தின் கவனத்துக்கு இதைக் கொண்டு வந்தேன். உடனே நீதிமன்றம், நிதிநிறுவன அதிபருக்குக் கைது வாரண்ட் போட்டு விட்டது. பதறியடித்துக் கொண்டு வந்த அதிபர் உடனேயே பணத்தை செட்டில் செய்வதாகச் சொல்லி அதன்படி நடந்துகொண்டார். இத்தனைக்கும்



அந்தப் பெரியவரை நான் நேரில் பார்க்கவில்லை. முகம் தெரியாத அந்தப் பெரியவர் எப்படி மகிழ்ச்சியடைந்திருப்பார் என்று மட்டுமே என்னால் கற்பனை செய்ய முடிந்தது.

**வர்த்தக நிறுவனத்தின் நம்பிக்கை, நல்லெண்ணம் பாதிக்கப்பட்டதால் வங்கி 15,000 ரூபாய் நஷ்ட ஈடு தரவேண்டும் என்று நீதிமன்றம் உத்தரவிட்டது.**

# வென்றார்கள்!

சென்னையில் மோகன் எண்டர்பிரைஸஸ் என்ற வர்த்தக நிறுவனம், பொருள் சப்ளை செய்யும் உற்பத்தியாளருக்கு, ஒரு காசோலை கொடுத்தது. உற்பத்தியாளர் அந்தக் காசோலையை அவர் வங்கியில் போட்டார். பாங்க் ஆஃப் அமெரிக்கா காசோலை அது. ஆனால் 'வர்த்தக நிறுவனத்தின் கணக்கில் பணம் இல்லை'' என்று சொல்லி வங்கி, காசோலையைத் திருப்பி விட்டது. அதிர்ந்து போனார் வர்த்தக அதிபர். வங்கியுடன் தொடர்பு கொண்டார். 'தவறு நடந்துவிட்டது. மீண்டும் காசோலையைப் போடச் சொல்லுங்கள்' என்றது வங்கி. மீண்டும் போட்டார் உற்பத்தியாளர். மறுபடியும் 'கணக்கில் பணம் இல்லை' என்று காசோலை திருப்பப்பட்டது. கடுப்படைந்த உற்பத்தியாளர் 'உங்களிடம் நாணயம் இல்லை. இனி உங்களுக்குப் பொருட்கள் சப்ளை செய்ய மாட்டோம்' என்று கூறிவிட்டார். பாதிப்படைந்த மோகன் எண்டர்பிரைஸஸ் சார்பில் வங்கிமீது வழக்கு தொடர்ந்தேன். கணினியில் ஏற்பட்ட குறைபாடு காரணமாக தவறு நேர்ந்துவிட்டது என்றது வங்கி. ஆனால் வர்த்தக நிறுவனத்தின் நம்பிக்கை, நல்லெண்ணம் பாதிக்கப்பட்டதால் வங்கி 15000 ரூபாய் நஷ்ட ஈடு தர வேண்டும் என்று நீதிமன்றம் உத்தரவிட்டது. ○

தொகுப்பு: **ப்ரியன்**
படங்கள்: **ராஜன்**



# வெல்லுங்கள், 100 கிராம் தங்கம்!




**ஏப்ரல் 14, 2007.** சர்வசித்து ஆண்டின் முதல் நாள். 60 வருட இந்திய காலண்டரில் 21வது ஆண்டு.

**வென்று காட்டுவோம்!** சர்வசித்து என்றால் அனைத்தையும் வென்றவன் என்று பொருள். சர்வசித்து ஆண்டில் எல்லாவிதமான நன்மைகளையும் பெற ஸ்ரீராம் நிறுவனங்கள் எப்பொழுதும் உங்களுக்குத் துணை நிற்கும்.

**நன்மை மிகுந்த புத்தாண்டுப் பிறக்கட்டும்.** புத்தாண்டு தினத்தன்று, வீட்டு வாசலில் கோலமிட்டு, மாவிலைத் தோரணம் கட்டி, வீட்டை அலங்கரிக்கவும், மாங்காய், வெல்லம், வேப்பம்பூ சேர்த்து 'மாங்காய்ப் பச்சடி' செய்யவும் நாம் மறப்ப தில்லை. இந்த இனிப்பு-புளிப்பு- கசப்பு சுவையின் கலவையானது நமது வாழ்வின் இன்பத் துன்பங்களைக் குறிப்பதாகும்.

**வளமை வாழ்வுக்கு எல்லை சேர்ப்போம்.** 33 ஆண்டுகளாக, மூன்று தலைமுறை இந்தியர்களின் நிதித்தேவைகளுக்கேற்ற முதலீட்டுத் திட்டங்களை வழங்கி வருகிறோம்.

**100 கிராம் தங்கம் வெல்லுங்கள். ஏப்ரல் 14, 2007 இன்று வரை.** இந்த சர்வசித்து புத்தாண்டுத் தினத்தில், ஸ்ரீராம் நிறுவனங்களின் ஏதாவது ஒரு நிதித் திட்டத்தில் சேரும் ஒவ்வொரு வருக்கும் ஒரு அன்புப் பரிசுக் காத்திருக்கிறது. அத்துடன் திறமைக் கான போட்டியில் கலந்துக் கொள்வ தற்கான கூப்பன் ஒன்றும் கிடைக்கும். போட்டியில் வெற்றிப் பெற்று 100 கிராம் தங்கம் வெல்லுங்கள். இவற்றுடன் 100க்கும் மேற்பட்ட ஆறுதல் பரிசுகளும், பரிசுக் கூப்பன்களும் உள்ளன*.

**ஸ்ரீராம் சிட்ஸ் சிறப்புகள்:** • 33 ஆண்டுகளாக பல லட்சம் குடும்பங்களின் வளமைக்கு வழிகாட்டி • நேரடியாகவும், மறைமுகமாகவும் ஏராளமானவர்க்கு வேலை வாய்ப்பு • சீட்டுத் தொகையாக இதுவரை ரூ.20,000 கோடிக்கு மேல் பட்டுவாடா • சீட்டுப் பரிசுத் தொகையாக தினமும் சுமார் ரூ.10 கோடி பட்டுவாடா • தமிழ்நாடு, கர்நாடகா, ஆந்திரா, மகாராஷ்டிரா மாநிலங்களில் 465க்கும் மேற்பட்ட கிளைகள்.

மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.



## ஸ்ரீராம் சிட்ஸ்

தமிழ்நாடு பிரைவேட் லிமிடெட்

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 600 006. போன்: 4223 6000 • இணையதளம்: www.shriramchits.com

**சர்வசித்து**

சித்திரைத் திருவிழா

ஏப்ரல் 4-14, '07

- நுழைவுக் கட்டணம் தனி
- முன் அனுமதி பெறப்பட்டது

| சீட்டுத் திட்டங்கள் | | | சீட்டு மதிப்பு |
|---|---|---|---|
| ரூ.375 | X | 40 மாதங்கள் | ரூ.15,000 |
| ரூ.500 | X | 40 மாதங்கள் | ரூ.20,000 |
| ரூ.625 | X | 40 மாதங்கள் | ரூ.25,000 |
| ரூ.500 | X | 60 மாதங்கள் | ரூ.30,000 |
| ரூ.1,000 | X | 50 மாதங்கள் | ரூ.50,000 |
| ரூ.2,500 | X | 30 மாதங்கள் | ரூ.75,000 |
| ரூ.2,500 | X | 40 மாதங்கள் | ரூ.1,00,000 |
| ரூ.5,000 | X | 30 மாதங்கள் | ரூ.1,50,000 |
| ரூ.5,000 | X | 40 மாதங்கள் | ரூ.2,00,000 |
| ரூ.10,000 | X | 30 மாதங்கள் | ரூ.3,00,000 |
| ரூ.12,500 | X | 40 மாதங்கள் | ரூ.5,00,000 |

*நிபந்தனைகளுக்குட்பட்டது

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.